உ

சிவமயம்

# பிள்ளையார் நோன்பு

## (வரலாறும் விளக்கமும் - நடைமுறையும்)





முனைவர்
தெ. சொக்கலிங்கம் எம்.ஏ., பி.ஓ.எல்., பி.எச்டி.,

3-2

உ

ஸ்ரீ கலங்காத கண்ட விநாயகர் துணை

# பிள்ளையார் நோன்பு

(வரலாறும் விளக்கமும் - நடைமுறையும்)





ஆசிரியர்

முனைவர் **தெ. சொக்கலிங்கம்** எம்.ஏ., பி.ஓ.எல்., பி.எச்டி.,

தமிழ்ப்பேராசிரியர் - தமிழ்த்துறைத் தலைவர் (முன்னை)

அழகப்பா பல்கலைக் கழகம்

சிறப்பாசிரியர், பூச்சரம்.

வெளியீடு

**பூச்சரம்**

14, பெரியார் பாதை,

சூளைமேடு, சென்னை-94.

போன்: 044-43805201

முதற் பதிப்பு : 2010

## நூல் பற்றிய விவரங்கள்


| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | பிள்ளையார் நோன்பு (வரலாறும் விளக்கமும் - நடைமுறையும்) |
| ஆசிரியர் | : | முனைவர் தெ. சொக்கலிங்கம் எம்.ஏ., பி.ஓ.எல்., பி.எச்டி., தமிழ்ப்பேராசிரியர் - தமிழ்த்துறைத்தலைவர் (முன்னை) |
| தாள் | : | வெள்ளைத்தாள் 14.4 கி.கி. |
| நூலின் அளவு | : | 18.5 × 12.5 செ.மீ. |
| பக்கங்கள் | : | 36 |
| பதிப்பு உரிமை | : | ஆசிரியருக்கு |
| வெளியிடுவோர் | : | பூச்சரம் 140, பெரியார் பாதை, சூளைமேடு, சென்னை-94. |
| பொருள் | : | ஆராய்ச்சிக் கட்டுரை |
| விலை | : | ரூ. 25.00 |
| கணினி அச்சு | : | பூச்சரம் பிரிண்ட்ஸ், காரைக்குடி. |
| அச்சிட்டோர் | : | பூச்சரம் பிரிண்ட்ஸ், காரைக்குடி. |

3-2

உ

சிவமயம்

ஸ்ரீ கலங்காத கண்ட விநாயகர் துணை

# முன்னுரை

அருள்தரு விநாயகர் என்று போற்றப்பெறும் கணேசமூர்த்தியாகிய பிள்ளையாரை நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் வணங்காத நாளில்லை. அவர்கள் சிவபெருமானுடைய திருமகனாகிய மூத்த பிள்ளையாரைப் பிள்ளையார் சுழியில் தெரிசித்தே எந்தப் பணியையும் தொடங்குவர். கார்த்திகைப் புதுமை, திருவாதிரைப் புதுமை, திருமணம், மணிவிழா போன்ற எல்லா விழாக்களிலும் விநாயகர் கோவிலுக்குப் போவதும் விநாயகரை வழிபடுவதும் வழக்கம். இவர்கள் பல்லாண்டுகளாக வாழ்ந்து வருகின்ற செட்டிநாட்டு ஊர்களில், ஏறத்தாழ நூற்றைம்பது விநாயகர் கோவில்களும் அமைத்திருக்கின்றனர். செட்டிநாடு அல்லாத வெளியிடங்களிலும் இவர்கள் கட்டிய விநாயகர் கோவில்கள் நூற்றுக்கும் மேற்பட்டவை.

பிள்ளையார் வழிபாட்டில் ஈடுபட்ட நகரத்தார்கள், கொண்டாடும் ஓர் இன்றியமையாத நோன்பு, 'பிள்ளையார் நோன்பு'. திருமணம் செய்த தன்மகளுக்குச் செட்டியார்கள் முதலாண்டு மிக விமரிசையாகப் பிள்ளையார் நோன்புச் சீர் கொடுப்பார்கள். இதனை முறைச் சிட்டைகளாலும் தீர்மானப் புத்தகங்களாலும் அறியமுடிகிறது. இன்றியமையாத பிள்ளையார் நோன்பைச் செட்டியார்கள் கொண்டாடுவதுபற்றி இந்நூல் ஆராய்ந்து கூறுகிறது. இக்கட்டுரை 'பூச்சரம்' இதழில் வெளிவந்தது. இதனை ஆராய்ந்து விரித்து எழுத வாய்ப்பு உளது.

''களியானைக் கன்றைக் கணபதியைச் செம்பொன்
ஒளியானைப் பாரோர்க் குதவும்-அளியானைக்
கண்ணுவதும் கைத்தலங்கள் கூப்புவதும் மற்றவன்தான்
நண்ணுவதும் நல்லார் கடன்''

வாழ்க வளமுடன்

**தெ. சொக்கலிங்கம்**

24.12.2008
காரைக்குடி



சூரக்குடி சிவன்கோவில்

# காணிக்கை

எங்கள் அயித்தை மகனும்
ஆச்சி கணவரும் அறிவாளியும்
சிறந்த நியாயவாதியுமான
அன்புக்குரிய
உயர்திரு. பழ.மு.சித. காசிவிஸ்வநாதன் செட்டியார்
அவர்களுக்கு [மாளிகைக் கடையார் வீடு]
இந்த ஆய்வுநூலைக்
காணிக்கை யாக்குகிறேன்.

அன்புள்ள
தே. சொக்கலிங்கம்
பார்வதி






# பிள்ளையார் நோன்பு

நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் என்னும் செட்டியார்கள் சிறப்பாகக் கொண்டாடும் சமயச்சடங்குகளில் பிள்ளையார் நோன்பு குறிப்பிடற்பாலது. தமிழகத்தில் வேறு எந்த சாதியாரும் பிள்ளையார் நோன்பு கொண்டாடுவதில்லை. நகரத்தார்கள் தொன்றுதொட்டுப் பிள்ளையாரை வணங்கி வருகின்றனர்.

## நகரத்தார்களின் பிள்ளையார் வழிபாடு

நகரத்தார்கள் நாள்தோறும் காலையில் நீராடிப் பிள்ளையார் கோயிலுக்குச் சென்று பிள்ளையாரை வழிபட்டுச் சிதறு தேங்காய் அடித்து வருகுவர். அவர்கள் குடியேறிய ஊர்களில் பிள்ளையார் கோயில் கட்டி ஊருணி அமைப்பர். இளையாத்தக்குடிக் கோயிலில் ஒன்பது உட்பிரிவுகள் உள்ளன. இவர்கள் ஒவ்வொருவரும் தங்களுக்கு எனத் தனியே ஒரு பிள்ளையாரைக் கொண்டாடி வருகின்றனர். அப்பிள்ளையாருக்குக் கோயில் கட்டியும் அவருக்கு முன்னே ஊருணி அமைத்தும் உள்ளனர். இளையாத்தக்குடி நகரத்தார் கைலாச விநாயகரையும் மாத்தூர்க் கோவிலார் 'கலங்காத கண்ட விநாயக'ரையும் வேலங்குடி நகரத்தார் 'மெய்ய விநாய'கரையும் சூரைக்குடிக் கோவிலார் தேசி விநாயகரையும் வழிபடுகின்றனர். இவ்வாறு நகரத்தார்கள் விநாயகப் பெருமானைக் கண்கண்ட கடவுளாகக் கோவில் கட்டி வணங்கி வருகின்றனர்.

நகரத்தார்கள் தங்கள் குடும்பத் திருமணத்தில் மணமகளுக்கு நாத்தனார் சடங்கு செய்வர். அந்தச் சடங்குத் தட்டில் விநாயகரை வைத்துச் சடங்கு செய்வது வழக்கம். மணமகளுக்குச் சீதனம் சீர்வரிசை செய்யும் நகரத்தார், வெள்ளியால் செய்த சிறிய விநாயகர் சிலையைக் கொடுப்பர். எல்லா வட்டகை நகரத்தாரும் தங்கள் மகளுக்குப் பொங்கலுக்குப் பொங்கப் பானை கொடுப்பது போலப்

பிள்ளையார் நோன்புக்கும் சீர் செய்வர். இவ்வாறு நகரத்தார் வாழ்வில், பிள்ளையார் தனி முதன்மை பெற்றிருக்கிறார். வழி பாட்டில் மற்றுமின்றி வாழ்க்கையிலும் பிள்ளையார் முக்கியத்துவம் பெறுகிறார்.

## பிள்ளையார்க்கு நோன்பு

பிள்ளையாரைத் தனிச்சிறப்புடன் கொண்டாடும் நகரத்தார்கள், பிள்ளையாருக்கு என்று வீட்டில் கொண்டாடும் நோன்பு பிள்ளையார் நோன்பாகும். இதனைப் பெண்கள் 'இழை எடுக்கிறது' என்றும் 'பிள்ளையார் நோன்பு' என்றும் கூறுவர். 'பிள்ளையா தம்பி' என்றும் சிலர் இதனைச் சொல்லுவதாகவும் கூறுகின்றனர். எனவே இது முருகனை நோக்கியது என்றும் சிலர் எழுதியுள்ளனர். தொன்று தொட்டு நகரத்தார்கள், பிள்ளையார் நோன்பைக் கொண்டாடி வருகின்றனர். இது சமணர்களாக இருந்த நகரத் தார்கள் சைவர்களாக மாறிய போது மேற்கொண்ட நோன்பு, அன்று தொட்டு இன்று வரை கொண்டாடப்படுகிறது. விநாயக ராகிய பிள்ளையார்க்கு உரிய நோன்பு பிள்ளையார் நோன்பாகும்.

கார்த்திகை சூள் பிடி முடிந்ததும் தொடர்ந்து இருபத்தொரு நாள்களும் விரதமாக நகரத்தார்கள் இருந்திருக்கின்றனர். இவர்கள் ஒவ்வொரு ஆண்டும் தங்களுடைய சைவ சமயப்பற்றுதலை இந்நோன்பின் மூலம் உரப்படுத்திக் கொண்டிருக்கின்றனர். இஃது ஆண்டுதோறும் பிராமணர்கள் பூணூல் போடுவது போன்று இவர்கள் நோன்பு மேற்கொள்கின்றனர். இவர்கள் ஒவ்வொரு நாளும் ஒவ்வோரிழையாக எடுத்து இருபத்தோர் இழையைச் சேர்த்து வந்திருக்கின்றனர்.

## நோன்பு கொண்டாடும் இடம்

விசேடங்கள் செய்யும் அறையே, நகரத்தார்கள் பிள்ளையார் நோன்பு கும்பிடும் இடமாகும். அந்த வீட்டைத் தூசி அடித்து மெழுகித் தூய்மை செய்வது இன்றியமையாதது. அந்த வீட்டில் கிழக்கு நோக்கிய வண்ணம் திருவிளக்கு (நிலை விளக்கு என்றும் குத்து விளக்கு என்றும் இதனைக் கூறுவர். இது வெண்கலத்தாலோ வெள்ளைப்பித்தளையாலோ வெள்ளியாலோ செய்யப்பட் டிருக்கும்.) அறையின் சுவரை ஒட்டிப் போடப்பட்டிருக்கும் கோலத்தின் மீது இருக்கும். எப்போதும் போல இந்த விளக்கில் இரண்டு திரி ஏற்றப்பெற்றுச் சோதி ஒளிவீசும்.

## தும்பு பிடித்துக் கோலம் போடுதல்

நகரத்தார் வீடுகளில் எந்தச் சிறப்பு நிகழ்ச்சியானாலும் (திருமணம், புதுமை, குடிபுகுதல்) தும்பு பிடிப்பது வழக்கம். தும்பு பிடித்தாலேயே விசேடம் தொடங்கிவிட்டது என்பது கருத்து. அறையின் உள்சுவரிலும் வாயிற்படிச் சுவரிலும் தும்பு பிடிப்பர். வீட்டுக்குரிய தலைவியும் மருமகளும் தும்பு பிடிப்பர். ஏட்டோலைக் கட்டிலுள்ள நூல் கயிற்றை ஒருவர் பிடிக்க இன் னொருவர் கோலமாவால் வரைவர். மேலே ஒரு முக்கோணமும் அம்முக்கோணத்தின் பெரிய பக்கத்தில் ஒரு செவ்வகமும் வரையப் பெறும். முக்கோணத்தின் நடுவில் ஒரு கோடு இருக்கப்பெறும். பிற விசேடங்களில் தும்பு பிடித்தபின்பே கோலமிடப்பெறும்.

பிள்ளையார் நோன்பில் தும்பு பிடிக்கு முன்னரே கோலம் போட்டுவிடுகின்றனர். நிலை விளக்கிற்கு முன் நடுவீட்டுக் கோல மிடப்பட்டிருக்கும். இக்கோலத்தில் பிள்ளையார் வீற்றிருப்பார். பிள்ளையாருக்கு வலப்பக்கத்தில் சற்று முன்னே தள்ளி குடும்பத்தின் பெரிய செட்டியார் உட்காருவதற்குப் பெண்கள் கோலம் போடுவர். அக்கோலத்தைத் தொடர்ந்து வரிசையாகக் குடும்ப உறவினர்கள் எண்ணிக்கைக் கேற்பக் கோலம் தனித்தனியே போடப்பெறும். இக்கோலத்தின் மீது புதிய தடுக்கைப் போட்டு ஒவ்வொருவரும் உட்காருவர். பெண்களோ பெண்குழந்தைகளோ அறைக்குள் போடப்பட்ட தடுக்கில் உட்காருவதில்லை.

## பலகாரம் செய்தல்

இதற்கிடையே பெண்டுகள் கருப்பட்டிப் பணியாரம், வெள்ளைப் பணியாரம், வடை, இனிப்புச் சீடை (ஆலங்காய்), முறுக்கு, அதிரசம், மணகோலம், பொரி வகைகள் ஆகியவற்றைச் செய்து வைத்திருப்பர். எல்லாப் பொருள்களும் வெள்ளிக் கிண்ணத்தில் வைத்துப் பிள்ளையாருக்குப் படைக்கப்பட்டிருக்கும். இவற்றைத் தனியே வைத்திருப்பர்; வழிபாடு தொடங்கிய பின் இவற்றை விநாயகர் முன் படைப்பர். இவற்றால் விநாயகருக்கு அபிஷேகமும் செய்வர்.

## ஆவிரம் பூச்செண்டு வைத்தல்

முதற்கண், பெண்கள் சங்கை எடுத்து ஊதுவர்; திருவிளக்கு ஏற்றப்பெறும். குடும்பப் பெரியவர் தலைப்பாக்கட்டிக் கொள்வார். குடும்பத்திலுள்ள இளஞ்சிறுவர் இவருக்குத் தலைப்பாக்கட்டி அவர்கள் இருவரையும் கொண்டு சாமி கும்பிடும் வாசற்

படியிலிருந்து ஆவிரம்பூச் செண்டைக் கையில் நேராகப் பிடித்துக் கொண்டு அறைக்குள் கூட்டிவருவார் அல்லது கொண்டு வந்து வைக்கச் செய்வார். இரண்டு பூச்செண்டுகளையும் விநாயகருக்கும் விளக்குக்கும் இருபுறமும் சுவரில் சாத்துவர். இவ்வாறு ஆவிரம் பூச்செண்டு வைப்பதே சுவாமி கும்பிடுவதன் தொடக்கமாகும்.

## வழிபாடு தொடங்கல்

இதன்பின் குடும்ப உறவுக்கேற்ப வயது வரம்பின் படி ஆண்கள் அனைவரும் வரிசையாகத் தடுக்கில் அமர்வர். திருவிளக்கின் அருகில் பிள்ளையார் இருப்பார்; அவர் முன் நிவேதனப் பொருள்களை வைத்து வீட்டுக்குப் பெரியவர் (குடும்பத்தலைவர்) விளக்கின் முன் தடுக்கில் உட்கார்ந்திருப்பார். இவர்தான் இழை எடுத்துக் கொடுப்பவர். இவருக்கு முன்னே நுனி வாழையிலையை விரித்துவைத்திருப்பார். இவ்வாழையிலையின் நுனியில் வெள்ளி அகல் விளக்கு நெய்யூற்றி ஏற்றித் தீபம் ஒளி வீசும்.

## இழை எடுத்தல்

குடும்பத்தைச் சேர்ந்த அனைவரும் அமர்ந்தபின் குடும்பத் தலைவர் துணியிலிருந்து ஒவ்வோரிழையாக இருபத்தோரிழை எடுப்பார். (சிலர் முன்னரே எடுத்துவைத்துக் கொள்ளுகின்றனர்.) அவர் இழை எடுக்கும் போது ஒரு முனையிலிருந்து மறுமுனை முடிய இழை அறுபடாமல் எடுத்தல் வேண்டும்; கூடுதலாகவோ குறைவாகவோ இழை எடுப்பதில்லை.

## விநாயகர் அகவல் படித்தல்

இழை எடுக்கும் போது குடும்பத்திலுள்ள சிறுவர் விநாயகர் அகவலைப் படிப்பர். மூன்று முறை விநாயகரகவலைப் படிப்பர். பழைய காலத்தில் விநாயகரகவலையும் வேழ முகத்தையும் படிப்பது கட்டாயமாக இருந்தது. சரசுவதி சிந்தனை போன்ற சிறு நூல்களும் படிக்கப்பெறும். இச்சிறு நூல்களைச் 'சில்லரைக் கோவை' என்ற தொகுப்பில் காண முடியும். இந்நூலை வைத்தே மேற்படி நூல் களைப் பிள்ளையார் நோன்பில் படிப்பர்; எனவே இச்சிறு நூலுக்கு வெல்வெட்டுத் துணியில் உறைதைத்துப் போட்டிருப்பர். ஒவ்வொரு பிள்ளையார் நோன்பிலும் இந்நூலை எடுத்துப்படிப்பர். குடும்பத் தலைவரே விநாயகர் அகவல், வேழமுகம் படித்த பின்பு நூலிழையை எடுத்தலுமுண்டு.

## இழைகளின் எண்ணிக்கை

இழை எடுப்பவர், இழையை எடுத்துத் தன் மடியிலோ வாழை இலையிலோ வைத்துக் கொள்ளுவார். இருபத்தோரு இழைகள் எடுத்து ஒன்று சேர்த்துப் பின் உறுப்பினர் எண்ணிக்கைக்கு ஏற்ப இழையை (நூலை) நறுக்கிக் கொள்ளுதல் வழக்கம். இழை யெடுத்துக் கொடுக்கும் தலைவருக்கு முதற்கண் ஒன்றும் நிறைவில் ஒன்றும் ஆக இரண்டு இழை உண்டு; இதனால் இருப்போர் எண்ணிக் கையை விட்டு ஒன்று கூடுதலாகப் பிடிக்க வேண்டும்.

முதற்கண் இழை எடுத்துக் கொடுப்பவர் சுவாமி தரிசனம் செய்து தீபத்துடன் ஓரிழையை வாயில் போட்டுக் கொள்வார்; பின் குடும்பத்தினர் ஒவ்வொருவராகப் பெரியவரைக் கும்பிட்டு இழையைப் பெற்றுக்கொள்வர். கருவுற்ற பெண்களுக்கு ஓரிழையும் கருவிலுள்ள குழந்தைக்கு ஓரிழையும் என்று இரண்டு இழை கர்ப்பிணிகளுக்கு வழங்கப்பெறும். குடும்பத்திலுள்ள கைம் பெண்களுக்கு இழை கொடுப்பதில்லை.

## பிள்ளையார் பிடித்தல்

கருப்பட்டி மா அல்லது வாழைப்பழம் அல்லது திரட்டுப் பால் ஆகிய மூன்றில் ஒன்றில் கூம்புவடிவமாகப் பிள்ளையார் பிடிப்பர். கருப்பட்டி மாவில் பிள்ளையார் பிடிப்பதே பெரும்பான்மை வழக்கம். இழை ஒவ்வொன்றையும் நெய்யில் தோய்த்துப் பிள்ளையார் நடுவில் வைத்துக் கூம்பு வடிவமாகச் செய்வர். (மஞ்சள், சாணம் போன்றவற்றைக் கூம்பாகப் பிடித்துப் பிள்ளையார் என்று சொல்லுவதால் கூம்பாகப் பிடிப்பதைப் பிள்ளையார் என்றனர்.) இவ்வாறு பிடித்த பிள்ளையார்களை வாழை இலையில் வரிசையாக வைத்திடுவர்.

ஒவ்வொருவருவராக வந்து விநாயகப் பெருமானையும் பெரியவரையும் வணங்கிடுவர்; திரியுள்ள பிள்ளையாரைப் பிள்ளையார் நோன்பு விளக்கில் ஏற்றிச் சோதியுடன் வணங்கி நிற்பவருக்குப் பெரியவர் கொடுப்பார். வணங்கியவர் அதைப் பணிவுடன் வாங்கிச் சோதியுடன் வாயில் போட்டுக் கொள்ளுவார்; சிலர் நெருப்பை அணைத்து விட்டுத் தின்பர். அனைவரும் இழை எடுத்துக் கொண்டபின் குடும்பப் பெரியவர் மீண்டும் ஓரிழை எடுத்துக் கொள்வார். இதனுடன் பிள்ளையார் நோன்பு நிறைவு பெறும். அவ்வப்போது சங்கு ஊதுவர்.

## கொண்டாடும் நாள்

கார்த்திகைத் திங்கள் கிருஷ்ண பட்சம் பிரதமை முதல் மார்கழித் திங்கள் சுக்கில பட்சம் சஷ்டி வரையில் இருபத்தொரு நாள்கள், பிள்ளையார் நோன்பு பின்பற்றப்படும். 'சட்டி (சஷ்டி) தொட்டுச் சதயம் விட்டு' என்ற பழமொழி இந்த உண்மையைத் தெளிவு படுத்தும். பிள்ளையார் நோன்பைச் சஷ்டிதிதியும் சதய நட்சத்திரமும் சேர்ந்து வரும் நாளிலேயே கொண்டாட வேண்டும். சிவமைந்தர்களான கணபதியையும் முருகனையும் ஒருங்குவழிபடு மாறு பிள்ளையார் நோன்பு சதயமும் சஷ்டியுமாக அமைகின்றது; எனவே இந்நோன்பைப் பிள்ளையார் நோன்பு என்றும் குமார சஷ்டி என்றும் விநாயக சஷ்டி என்றும் போற்றுகின்றனர்.

## திருக்கார்த்திகை முதலாக

திருக்கார்த்திகையிலிருந்து இருபத்தொரு நாள்கள் பிள்ளையார் நோன்புக்குக் கணக்கிடப்படுகின்றன. கார்த்திகை நகரத்தார்களுக்கு மிக இன்றியமையாத நாள். இது பற்றி வயிநாகரம் அ. இராமநாதன் செட்டியார் எழுதுவதாவது:

"பள்ளிக்கூடத்தில் படிக்கும் ஆண்பிள்ளைகளைக் கார்த்திகைத் திங்கள் நாளில் வீடுகளில் வாழை நாட்டுத் திருவிளக்கேற்றி விநாயகர் கோயிலுக்கோ அன்றிச் சிவாலயத்துக்கோ குதிரையேற்றிச் சென்று (சொக்கப்பான் கொளுத்தி). சோதிதரிசனம் செய்து வரச்செய்வர். இதை அரைக்கலியாணம் என்றும் 'சூள்பிடி என்றும் சொல்வார்கள். சூள்பிடி என்பது அணையாதலாந்தல் (Latern) விளக்குகள், மெழுகுத்திரி விளக்குகள், முதலியன இல்லாத அக்காலத்தில் ஒருவகைக் காட்டு மரத்தில் (சூந்தமரம்) முழுவதும் பிளக்காமல் சிறிது சிறிதாகக் குத்தி வலைஞர்களால் செய்யப் படுவது. இதைக் குதிரைக்கு முன் பிடித்துக் கொண்டு செல்வார்கள். இதனாற்றான் இந்த விசேஷத்திற்குச் 'சூள்பிடி' என்று பெயராயிற்று. எத்தனையோ அற்புதமான பேரொளி விளக்குகள் வந்தும், அவற்றை உபயோகித்து வரும் இந்நாகரிகக் காலத்திற்குக் கூட அந்தச் 'சூள்பிடி' என்ற பெயர் மாறவில்லை. சூள்பிடியைத் தற்பொழுது வெண் கலத்தால் கோல்வடிவில் செய்து நெருப்புக் கொண்டு சொக்கப்பான் கொளுத்துகின்றனர்." *(பக். 34-35).*

## சொக்கப்பான் கொளுத்தல்

ஒவ்வொரு நகரத்தாரும் சோதியைத் தரிசனம் செய்து வீட்டிலும் சோதியை ஏற்றி வழிபடுகின்றனர். நடுவீட்டில் வாழைத் தண்டை

நிறுத்தி அதில் பன்னிரண்டு குழிவிளக்குள் அமைக்கப்பட்ட சதுரமான தட்டைச் செருகிவைத்திருப்பர். எல்லாவற்றிலும் விளக்கு எரியும். நடுவீட்டில் சுவாமி கும்பிட்ட பின் சிறுவன் தலையில் குல்லாய் அணிந்து கொண்டு மாமக்காரர் கூட வரக் குதிரையில் பிள்ளையார் கோயிலுக்கு வருவான். சொந்தக்காரர் களும் பங்காளிகளும் உடன் வருவர். கோயிலில் சுவாமி தரிசனம் செய்து கையில் சூள்பிடி கம்பை எடுத்துக் கொண்டு கோயிலுக்கு முன் அன்று கட்டப்பட்டிருக்கும் சொக்கப்பானைக் கொளுத்து வான். ஒரே நாளில் பலர் வந்தால் பலரும் கூட்டாகச் சொக்கப் பானைக் கொளுத்துவர்; கொளுத்திமுடியும் வரை அனைவரும் சொக்கப்பானைத் தரிசித்துப் பின் எரிந்த நீற்றை எடுத்து நெற்றியில் பூசிக் கொள்வர். இச்சடங்கில் பஞ்சாங்கக்கார அய்யருக்கு எந்த வேலையுமில்லை.

**வரலாற்றுண்மை**

நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் பற்றி எழுதிய எட்கர் தர்ஸ்டன், திருக்கார்த்திகை, திருவாதிரை பற்றியும் தன்னூலில் எழுதியுள்ளார். நகரத்தார்களிடையே திருக்கார்த்திகை, திருவாதிரை என்ற சடங்குகள் செய்வது இன்று இல்லை. நகரத்தார்களின் அயல் நாட்டுத் தொடர்புகள் குறைந்து பொருளாதார வசதி குன்றியமை யால் இன்று இவை செய்யப் பெறவில்லை; இதனால் அறுபது வயதுக்கு மேற்பட்டவர்களுக்கே, இந்தச் சடங்குகள் பற்றிய விவரங்கள் தெரியும். எட்கர் தர்ஸ்டன் கி.பி.1907 இந்நூலை வெளியிட்டுள்ளார். ஏறத்தாழ முப்பதாண்டு களுக்கு முன் தனக்குக் கிடைத்தவற்றை அவர் நூலில் பதிவு செய்திருக்கிறார். அந்த விவரம் தரப்பெறுகிறது.

“திருமணத்திற்கு முன் நாட்டுக்கோட்டைச் செட்டி இளை ஞர்கள் அனைவரும் சூப்பிடி (சூர்ப்பிடுதல்= சுற்றியாட்டுதல்) என்ற சடங்கினை நடத்துதல் வேண்டும். கார்த்திகைத் திங்கள் திருநாளன்று அவன் குதிரை மீது ஏறிப் பிள்ளையார் கோயிலுக்குச் செல்வான். அங்கு வழிபாடு நிகழ்த்தியபின் ஒருபையில் போடப் பட்டுள்ள தணலை நீண்ட கயிற்றோடு பிணைத்துக் கட்டித் தலைக்கு மேலே சுழற்றுவான். கோயிலுக்கு எதிரே அமைக்கப் பட்டுள்ள சொக்கப் பனையினை அவன் கொளுத்திய பின் அதன் சாம்பலை அவன் நெற்றியில் பூசுவர். அவன் வீட்டிற்குத் திரும்பும் போது வழியில் உள்ள நாட்டுக் கோட்டைச் செட்டிகளின் வீட்டு வாசல்களிலும் (பங்காளி), அவன் வீட்டுக்குத் திரும்பியபின் அவன்

வீட்டு வாசலிலும் அரிசி மாவிளக்கால் (ஆலத்தி எடுத்தலையே குறிக்கிறார்) அவனுக்கு ஆர்த்தி எடுப்பர். இதே போன்று சிறுமியரும் தங்கள் திருமணத்திற்கு முன் திருவாதிரை என்ற சடங்கினை நிகழ்த்துதல் வேண்டும். ஆருத்ரா தரிசனத்தன்று அவளைக் குளிக்கச் செய்து அலங்கரிப்பர். அதுவரை அணிந்து வந்த கண்ணாடிப் பாசிமணி மாலைக்குப் பதிலாகத் தங்க மணி களாலான கழுத்துச் சங்கிலி அணி விக்கப்படுவாள். கையில் ஒரு வெள்ளிக் கிண்ணத்தை ஏந்தியவளாக அத்தகைய சடங்குகளைத் தன்னைப்போலவே நிகழ்த்தும் பெண்களின் வீடுகளுக்குச் சென்று பின்வருமாறு குரல் (பாடுவாள்) கொடுப்பாள்:

*'ஆடி வந்த எனக்கு அவரைக் காய் படையுங்க!*
*பாடி வந்த எனக்குப் பாடஅவரை படையுங்க!*
*சொல்லி வந்த எனக்குச் சுரைக்காய் படையுங்க!'*

அந்த வீட்டார் சமைத்து வைத்திருக்கும் பலவகைக் காய் கறிகளையும் அவளுக்கு கிண்ணத்தில் இடுவர். (இந்தப் பாட்டை வயிநாகரம் அ.இராமநாதன் செட்டியார் நகரத்தார் வழக்கில் உள்ளபடி பின் வருமாறு அவர் நூலில் காட்டுகிறார்.

*'ஆடி ஆடிவாரோம் அவரைக்காய் போடுங்கள்*
*பாடிப்பாடி வாரோம் பாடவரங்காய் போடுங்கள்*
*கூடிக்கூடி வாரோம் கொத்தவரங்காய் போடுங்கள்'*

-என்று பாடுவர் (ப.35). அன்று மணமான பெண்கள் வீட்டில் தோசை வார்த்து (திருவாதிரை செய்யும் வீட்டிலேயே திருவாதிரைத் தோசை சுட்டு வந்தனர்.) அதில் இரும்புமயிர்க் கோதியால் (சத்தகம்) துளை யிட்டு அதனையும் மேற்கண்டவாறு பாடிவரும் பெண்களுக்கு இடுவர். இத்தகைய பொருள்களைப் பாடிச் செல்லும் ஒருத்தி பெறவில்லை யானால் அதனைத் தனக்கு நேர்ந்த பெரிய இழிவாகக் கருதுவாள்'' (பக். 271-274)

## இளைஞர்க்குரிய சடங்கு

நகரத்தார்கள் திருக்கார்த்திகை அன்று விநாயகர் கோயிலுக்கு வருதலும் சொக்கப்பனை கொளுத்தலும் பின் தலையைச் சுற்றி மூன்று முறை வட்டமாகத் தணலைச் சுற்றுதலும் செய்குவர். (சிலர் பையில் போட்டுச்சுற்றுவர் என்றும் சூந்தக் கம்பை வாங்கிச் சுற்றுவர் என்றும் கூறுகின்றனர்.) பின் சொக்கப்பனையாகிய அக்கினி தரிசனம் முடித்து அதிலுள்ள நீற்றை எடுத்து நெற்றியில் பூசிக் கொள்வர்; கணபதி ஓமத்தில் இரட்சையணிந்து கொள்வது

போலச் சாம்பலை நெற்றியில் குழைத்தும் அணிந்து கொள்வது முண்டு.

இச்சடங்கின் மூலம் சமணர்களாக இருந்த நகரத்தார்கள் சைவர்களாகினர். பல்வேறிடங்களுக்கு வணிகத்தின் பொருட்டுச் சென்ற இவர்கள், திருவண்ணாமலையில் சமணத்தைப் புறக் கணித்துச் சைவ சமயம் புகுந்தனர். இஃது அப்போது மேற் கொள்ளப்பட்ட சடங்கு ஆகும்.

## பெண்டிர்க்குரிய சடங்கு

இவர்களைச் சமயமாற்றம் செய்தவர் மாணிக்கவாசகர் அவரைச் சார்ந்தோர் ஆவார். இதற்கு மேலும் ஆதாரங்கள் வேண்டும். கார்த்திகைச் சூப்பிடி, திருவண்ணாமலை தீபதெரிசனம் எனின் திருவாதிரைப் புதுமை பெண்களுக்குரிய பாவை நோன்பாகும். இரண்டும் திருவண்ணா மலைத் திருத்தலத்துக்குத் தொடர்புடையன. ஒன்று தீபதெரிசனம்; இன்னொன்று பாவை நோன்பு. திருவெம்பாவை மாணிக்க வாசகரால் திருவண்ணா மலையில் பாடப் பெற்றது என்பர் கடவுள் மாமுனிவர். (திருவாதவூரடிகள் புராணம்- திருவம்பலச் சருக்கம். 383-385) நகரத்தார்களின் பிள்ளைகளுக்கும் பெண்களுக்கும் செய்யும் இச் சடங்குகள் திருவண்ணா மலைத் தொடர்புடையன. திருவண்ணா மலையில் சைவ சமயத் தொடர்பு பெற்ற இவர்கள், தில்லையில் சிவதீக்கை பெற்றனர். நகரத்தார்களுடன் ஈழத்திலிருந்து வந்திருந்த பௌத்தர்களும் சிதம்பரத்தில் சைவர் களாயினர். (விநாயகர் விரதம்-காந்தளகம்) இதனால் ஈழ நாட்டிலுள்ள சிலரிடம் பிள்ளையார் நோன்பு கொண் டாடும் வழக்கமுள்ளது.

## நோன்புக் காலம்

கார்த்திகைத் தீபதெரிசனம் முடித்த நகரத்தார்கள் இருபத்தொரு நாள் நிறைவேறிய பின் இருபத்திரண்டாம் நாள் பிள்ளையார் நோன்பு கொண்டாடிச் சைவராயினராதல் வேண்டும். இந்த இருபத் தொரு நாளும் நகரத்தார்கள் நோன்பாக இருந்து சிவ சிந்தனை யுடன் விளங்கினர். நாளொன்றுக்கு ஓரிழை மேனி இருபத்தொரு நாளுக்கு இருபத்தோர் இழை எடுத்தனர்; ஒவ்வொரு நாளும் ஒவ்வோரிழையாக எடுக்கப் பெற்றது. இன்று இவ்வழக்கம் நின்று போய், ஒரே நாளில் இருபத்தோரிழையையும் எடுக்கின்றனர். சிலர் நூலாக வாங்கியும் இருபத்தோர் இழையைத் தொகுத்துக் கொள்ளு கின்றனர்.

## சிவ வழிபாட்டின் தொடக்கம்

சிவ வழிபாட்டின் தொடக்கமாகவும் பிள்ளையார் வழிபாடு அமைகிறது; அன்றி விநாயகரும் சிவபரம் பொருளே; அவர் ஓம் எனும் மூலப் பொருளாய்ப் பிரணவமாய்த் திகழ்கிறார். பல குடும்பங்களில் பிள்ளையார் நோன்புக்கு மறுநாள் பூவுக்குப் படைத்து நோன்பை நிறைவு செய்கின்றனர். ஆடவர்க்குக் கார்த்திகை போலப் பெண்களுக்குத் திருவாதிரை நோன்பு. கழுத்துருவின் சில உருக்களை எடுத்துக் கோத்துக் கட்டி மார்கழித் திருவாதிரையில் இந்நோன்பைத் திருவாதிரைப் புதுமை என்று கொண்டாடுகின்றனர். இதனை, "ஆதிரையா கும்பிடுவது" என்பர்.

நகரத்தார்கள் திருமணத்தில் கழுத்துருவை இரட்டை வடமாகக் கட்டுவர்; அதிலுள்ள பதினாறு உருப்படிகளை எடுத்து ஒத்த வடமாகக் கட்டுவது வழக்கம்; அதனால் இதனைச் சிலர் 'அரைக் கலியாணம்' என்பர்.

## ஆதிரை நோன்பா?

மணிமேகலை 'ஆதிரை' என்ற வணிகர் குலப் பெண்ணைப் பற்றிக் கூறுகிறது. இவள் கற்பரசி; கோவலன்- மாதவி மகளான மணிமேகலை, அமுதசுரபி என்ற அரிய பிச்சைப்பாத்திரத்தைப் பெற்றாள்; அப்பாத்திரத்தில் முதன் முதல் பிச்சையிட வேண்டியவள் ஒரு கற்பரசியேயாம். அவளே ஆதிரை. அவளை அடிப் படையாகக் கொண்டு இந்நோன்பு கொண்டாடப்படுவதாகச் சிலர் கருதுகின்றனர்; மணிமேகலையில் வரும் ஆதிரைக்கும் திருவாதிரை நோன்புக்கும் தொடர்பில்லை.

## சிவ வழிபாடு

திருவாதிரை, சமணர்களாக இருந்த பெண்களுக்குச் சைவர்களாக மாற ஏற்படுத்திய நோன்பாகும்; பெண் திரள்வதற்கு முன் (ருதுவாகுமுன்) இதனைச் செய்தல் வேண்டும். ஆதிரை நட்சத்திரம் சிவபெருமான் ஆக்கல், அளித்தல், அழித்தல் என்ற மூன்று தொழில்களையும் செய்ய உருவங்கொண்ட நாள். இந் நாளில் சிவன் கோயில்களில் பஞ்ச கிருத்திய உற்சவம் நடைபெறும். 'பெண்கள் திருவாதிரையன்று சிவாலயமுள்ள இடங்களில் நடராசப் பெருமானையும் சிவாலயமில்லாத இடங்களில் விநாயகப் பெருமானையும் அணிகலன் பூண்டு சென்று தொழுது வருவார்கள்' (வயிநாகரம். ப.35). அன்று திருவாதிரை நட்சத்திர தரிசனமும் செய்வர். வணிகர் குலத்தைச் சார்ந்த காரைக்காலம்மையார்,

சிவபெருமானுடைய திருக்கூத்தை (நடராசப் பெருமானை)ப் புகழ்ந்து போற்றிப்பாடுவதும் சிவபெருமானியற்றிய ஐந் தொழில் களை விரிவாகப் பாடுவதும் இந்நோன்புடன் ஒப்புநோக்கி யாராயத்தக்கவை.

## சமயம் மாற்றம்

நகரத்தார்கள் மாணிக்க வாசகராலோ அல்லது அவர் குழுவைச் சார்ந்தவராலோ சைவர்களாக மாற்றம் பெற்றனர். இவ்வணிகக் குழுவினர் திருவண்ணாமலைக்கு வந்தபோது இச்சமய மாற்றம் நிகழ்ந்தது.சோதி தரிசனத்தின் மூலம் சிவதரிசனம் பெற்று நகரத்தார்கள் சைவர்களாயினர். கார்த்திகைத் தரிசனம் முடிந்த பின் (சோதியைத் தரிசித்த பின்) பிள்ளையார் நோன்பு அன்று பிடிக்கும் பிள்ளையார் அண்ணாமலையின் வடிவமேயாகும்.

அப்பிள்ளையாரின் உச்சியில் உள்ள திரியில் ஒளியை ஏற்றி (நெருப்பு வைத்து) கார்த்திகை சோதியைத் தரிசித்து நகரத்தார்கள் இழையை விழுங்குகின்றனர். ஒவ்வோராண்டும் தங்கள் சமய வுணர்வை நகரத்தார்கள் இந்நோன்பின் மூலம் உறுதிப்படுத்திக் கொள்கின்றனர். கார்த்திகை சோதி தரிசனம் செய்வது, நகரத்தார் இளைஞன் வாழ்க்கையில் ஒரே ஒருமுறை நிகழ்வது; இழை யெடுத்துச் சோதி தரிசனம் செய்வது (பிள்ளையார் நோன்பு) ஆண்டுக்கு ஒருமுறை நிகழ்வது.

## வயிற்றுக்குணவு

மனித உடலில் ஆறாதாரங்களைச் சுட்டுவர். ஆறு ஆதாரங்களில் நாபிப்பிர தேசத்தில் சுவாதிட்டனத்தின் மேலாகப் பத்திதழ்த் தாமரை வடிவுடையதாகக் கருதப்படும் இடம் மணிபூரகம். ஆறா தாரங்களுள் திருவண்ணாமலை மணிபூரகத்திருத்தலம். “மனித உடலைப் பொறுத்த வரை மணிபூரகம் என்பது வயிற்றைக் குறிக்கும். வயிற்றுக்காகத்தான் இந்த உலகமே இயங்குகிறது. எனவே ஒட்டு மொத்த உலக இயக்கமும் அண்ணாமலையாருக்குள் அடங்கும்” (தினமலர் நவம்பர் 2005). திருவண்ணாமலை மணி பூரகத்தலம்- வயிறு- அதனைக் கருதியே அத்தலம் நிறைவு பெறப் பல்வகைப் பலகாரங்களும் மாவால் செய்த பிள்ளையாரும் பிடித்து நகரத்தார்கள் பிள்ளையார் நோன்பு கொண்டாடுகின்றனர். அக்கினியில் பல்வேறு தானியங்கள் பொரியும். அதனால் இந்த வழிபாட்டில் பல்வேறு பொரிகளும் படைக்கப்படுகின்றன. நெற்பொரி ‘லாஜபுஷ்பம்’ என்று வேள்வியில் பயன்படுத்தப்படுவது.

இஃது ஆன்மா அனையது; தெய்வத்திற்கு ஆன் மாவைக் காணிக்கை ஆக்குவதாகக் காட்டுவது. ஆகையால்தான் திருவண்ணாமலையைக் களமாகக் கொண்டு நோன்பை இவ்வாறு கொண்டாடுகின்றனர்.

### சமயமாற்றச் சடங்கு

ஒருவர் பிற சமயத்திருந்து சைவ சமயத்திற்கு மாறிய போது என்னென்ன சடங்குகள் மேற்கொள்ளப்பட்டன என்பது தெரிய வில்லை. திருநாவுக்கரசர் சமணராக இருந்து சைவராகிய போது, அவருடைய குடும்பத்தைச் சார்ந்த திலகவதியாரே (அக்கா), அவரைச் சைவராக்கினார். சூலை நோயால் வாடிய திருநாவுக் கரசரைத் திலகவதியார் திருவதிகை திருவீரட்டத் திருக் கோயிலுக்குள் புகுவதற்காகக் கயிலைப் பிரான் திருநீற்றை அஞ்செழுத்தோதிக் கொடுத் தார். (பெரிய புராணம் திருநாவு. 66) திருநாவுக்கரசரோ அத்திருநீற்றைப் 'பெருவாழ்வு வந்ததென' வாங்கி அணிந்து கொண்டு கோயில் புக்கார். திருநாவுக்கரசர், சமணம் விடுத்துச் சைவத்துக்குள் புகுந்த சடங்கு இதுவேயாகும். பஞ்சகவ்வியத்தைத் தெளித்துப் புனிதப்படுத்தியதாகவும் தெரிகிறது. சேக்கிழார் சமய மாற்றத்திற்கு வேறு விரிவான சடங்குகளைச் சொல்லவில்லை. அதுபோலவே நகரத்தார்களும் சமணத்தை விடுத்துச் சைவத்துக்கு எளிய முறையில் மதம் மாறியிருக்க வேண்டும். குடும் பத்தினர் அனைவரும் சமணரா யிருந்தமையான், மாணிக்கவாசகர் போன்ற ஓர் அந்தணரால் சைவராய் மாறிச் சிவதரிசனம் பெற்றனர்.

### உறுதிப்பாடு

திருக்கார்த்திகையில் சமய மாற்றத்தை ஏற்றுப்பின் நாள்தோறும் மனத்தைச் சைவ நெறிக்குத் தகுதிப்படுத்திக் கொண்டு பிள்ளையார் நோன்பு அன்று ஸ்திரமாக (நிலையாக)ச் சைவராயினர். மதம் மாறிய வர்கள் மனம் தடுமாறலாகாது என்பதற்காகவும் பழைய மதத்தவரால் இடையூறு வரலாகாது என்பதற்காகவும் தொடர்ந்து இருபத்தொரு நாள் நோன்பு மேற்கொள்ளப்பட்டது. தொடர்ந் திருந்து வந்த சிவசிந்தனையின் தொடர்பாலேயே, பள்ளியிற் பிள்ளையார் சிந்தனை, வேழ முகம் போன்ற சைவசிந்தாந்தம் பேசும் நூல்கள் படிக்கப்பட்டன.

## மாற்றியவர் யாரோ ?

நகரத்தார்களைச் சைவராக்கியவர் யார்? மதம் மாற்றம் செய்தவர் யார்? என்பதை அறிய வேண்டிய ஆதாரங்கள் இல்லை. நகரத்தார்களின் மன மாற்றத்துக்கும் மதமாற்றத்துக்கும் மாணிக்க வாசகரே காரணமாவார். நகர வேலங்குடிக்கோயிலில் நடராசர் சந்நிதியில் யோக தண்டமுள்ளது. இத்தண்டத்தை வைத்துக் கொண்டே நகரத்தார்களுக்கு, அவர்களுடைய உபதேச குரு ஐந்தெழுத்து மந்திரத்தை உபதேசிப்பார். அத் தண்டமில்லாமல் உபதேசிப்பது இல்லை. பிராமணர்களிடையே தந்தையே மகனுக்கு மந்திரோபதேசம் செய்குவர். ஆனால் நகரத்தார் களில் பிள்ளைக்குப் பெற்றவன் உபதேசிப்பதில்லை. இதற்கெனத் தனியே உள்ள அந்தண குருவே உபதேசிப்பார்.

மாணிக்கவாசகர் தொடர்பினாலேயே இந்த யோக தண்டம், நகர வேலங்குடி நடராசர் சந்நிதியில் உள்ளது. ‘குரு’ என்று நோக்கும் போது தட்சிணாமூர்த்தி சந்நிதியில் இருக்கவேண்டும்; நகரத்தார்களின் பூர்வீகத் தலமான இளையாத்தக்குடிக் கோயிலில் இருத்தலே பொருத்தம். நகரத்தார்களில் தலைமை பூண்டு வணிக மேலாண்மை நிருவாகத்தை மேற்பார்த்தவர்கள் இளையாத்தக்குடி-பட்டண சுவாமியார். அதைப் போல நகரத்தார்களின் சமயத் தொடர்பானவற்றைக் கண்டு நடத்திய வர்கள், வேலங்குடிக் கோயிலார். நகரத்தார்கள் தனித்தனிக் கோயிலாகப் பெருகுமுன்னர், அவர்களின் தீட்சாகுரு தொடர்பானவற்றை வேலங்குடி நகரத் தார்களே செய்து வந்தனர். இதனால் இவர்கள் ‘தேசிக நாராயண புரமுடையார்’ எனப் பெற்றனர். (வேலங்குடிக் கோயில் ப.19) இப்பெயர் இவர்களுக்கும் இவ்வூருக்கும் எவ்வாறு ஏற்பட்டது என்பது ஆராய்தற்குரியது. ஆனால் ‘தேசிகர்’= குரு என்று பொருள். ‘தேசிக நாராயண’ என்பது குருவுடன் நெருக்கமானவர்கள் இம்மரபினர் என்பதைக் காட்டு கிறது. (தேசிகர் என்ற சொல்லுக்கு வணிகர் என்றும் பொருளுண்டு.)

நகரத்தார்களின் குரு, காசி யாத்திரை சென்ற போது அவர்களை வழியனுப்பி வேண்டிய நன்மைகள் செய்தவர்கள், வேலங்குடிக் கோயிலாரே. காசி போன குரு வாராமல் காலங்கடந்து போனமையால், புதிய குருவை ஏற்படுத்தி உபதேசம் கேட்டுக் கொள்ளத் தூண்டிய வர்களும் இவர்களே. இதனால் இவர்கள் குருவின் மனவருத்தத்துக்கும் சாபத்துக்கும் ஆளாக நேரிட்ட தும் வரலாறு. புதிய குருவிடம் உபதேசம் கேட்டவர்களில் மிகுதி

யானவர்கள் மாத்தூர்க் கோயிலாரே. அவர்கள் அனைவரும் புதிய குருவின் திருவருள் பெற்றுப்பெருகினர். உபதேசம் கேட்பது 'உபதேசப் புதுமை' என்று பெருங் கொண்டாட்டமாகியது. வேலங்குடிக் கோயில்- மாணிக்கவாசகர் சந்நிதியில்- யோக தண்டம் இருப்பது நகரத்தார்களுக்கும் மாணிக்கவாசகருக்கும் தொடர்பிருப்பதைக் காட்டுகிறது.

நகரத்தார்கள் சாதி முறை நியாயம் எழுதி வைத்தவர்கள், 'நகரத்தார்கள் குதிரை வியாபாரம் செய்யாதிருத்தல் வேண்டும்' என்று எழுதியிருக்கின்றனர். மாணிக்கவாசகர், பாண்டியனுக்குக் குதிரை வாங்கப் போய் பட்ட பாட்டைச் சிவனே அறிவான். மாணிக்கவாசகரைப் பாடாய்ப் படுத்தி அலைக்கழித்தது குதிரை வணிகம் என்பதால் அதனை நகரத்தார்கள் புறக்கணித்தனர்.

இதுகாறும் சுட்டியவற்றால் நகரத்தார்கள் மாணிக்கவாசகர் காலத்தில் மாணிக்கவாசகரால் சமணர்களாக இருந்தவர்கள் சைவர்களாயினர் என்று தெரிகிறது. இவர்கள் தனியே ஐந்நூற்றுவர் என்ற வணிகக் குழுவினராய்ச் செட்டிநாட்டு வட்டாரத்தில் வாழ்ந்து வந்தனர்.

### பிள்ளையார் நோன்பு நாள்

கார்த்திகைக் கார்த்திகை, மார்கழித் திருவாதிரை, மார்கழிச் சதயம் என்று மூன்று நட்சத்திர நாள்களும் நகரத்தார்கள் வாழ்வில் குறிக்கத் தக்கவை. தநுர் மாதம் (மார்கழி) ஒரே இடத்திலிருந்து வழிபாடு செய்தற்குரிய மாதம். பிள்ளையார் வழிபாட்டில் இரண்டு நாள்கள் மிகச் சிறப்பாகக் குறிக்கத்தக்கவை. ஒன்று ஆவணித்திங்கள் பூர்வ பட்சச் சதுர்த்தி நாள்; (இதனை ஆச்சிமார்கள் சதுர்த்தி விரதம் என்று பிடிப்பர்.) மற்றொன்று மார்கழித் திங்கள் பூர்வ பட்சச் சதுர்த்தி. ஆவணி பூர்வபட்சச் சதுர்த்தி, விநாயகப் பெருமான் பிறந்த நாளாகும். மார்கழிப் பூர்வ பட்சச் சஷ்டி பிள்ளையார் கஜமுகா சூரனை அழித்து அடியார்களைக் காப்பாற்றிய நாள்; விநாயகப் பெருமான், கஜமுகாசூரவதம் செய்ததைத் திருநாவுக்கரசர்,

*"கைவேழ முகத்தவனைப் படைத்தார் போலும்*
*கயாசுரனை யவனாற் கொல்வித்தார் போலும்*
*செய்வேள்வித் தக்கனைமுன் சிதைத்தார் போலும்*
*திசைமுகன்றன் சிரமொன்று சிதைத்தார் போலும்"*

*[ஆறாம்.533]*

-என்று பாடுகிறார். இந்த இரண்டு நாள்களிலும் விநாயகரை வணங்கினால் அல்லவை அழிந்து நல்லவை பெருகும். இதனைச் சிலர் குமார சஷ்டி என்று சொன்னாலும், இதில் விநாயகருக்குத் தான் முதன்மை.

வேற்றுச் சமயத்தை அழித்துச் சைவ சமயத்தைக் கைக்கொள்ள விநாயகர் கசமுகாசுரனை அழித்து வென்ற நாளை நகரத்தார்கள் தேர்ந்து கொண்டனர். இவ்விழா பிள்ளையார்பட்டியில் கொண்டாடப்பெறுகிறது.

## இழை எடுக்கும் இடம்

பிள்ளையார் நோன்பு அன்று நகரத்தார்கள் தங்கள் வீடுகளிலேயே இழை எடுத்துக் கொள்ளுவர். பிள்ளையாரை வழிபாடு செய்து தங்கள் வீடுகளிலேயே இழை எடுத்துக் கொள்வது பெரும் வெற்றியைத்தரும்; வழிபடுவோரை மனத்துன்பம் எவையும் கிட்ட நெருங்கா. இன்று நகரத்தார் வீடுகளில் பெண்கள் பலகாரம் செய்வதற்கு அஞ்சியே பொது இடங்களுக்குச் சென்று இழை எடுத்துக் கொள்ளுகின்றனர். சில ஊர்களில் நகரப் பொது வான வீடுகளிலோ நகரவிடுதிகளிலோ விநாயகர் கோயிலிலோ சிவன் கோவிலிலோ ஒருங்கு கூடிப் பிள்ளையார் வழிபாடு செய்து இழை எடுத்துக் கொள்ளுகின்றனர்.

நகரத்தார் வீடுகளில் விசேடம் செய்யும் வீடு (அறை) என்று ஒன்றிருக்கும். இங்குதான் பொங்கல், பிள்ளையார் நோன்பு, சித்திர புத்திர நயினார் பொங்கல், பங்குனிப் பொங்கல் போன்றவற்றைக் கொண்டாடும்போது திருவிளக்கு ஏற்றுவர். நகரத்தார்கள் கோட்டை போன்ற பெரிய வீட்டில் வாழ்ந்தாலும், நடப்பில் புழங்க இருக்க இன்னொரு வீடும் வைத்திருப்பர்; இங்குள்ள அறையே இத்தகைய விசேடங்களுக்குப் பயன்படும். பெரும்பாலும் படைக்கிற வீட்டில் இழை எடுத்துக்கொள்வதில்லை.

ஒன்பது நகரக் கோவிலில், வயிரவன் கோவில் அக்கோவிலார் ஏற்பாட்டில் அங்குள்ள நகர விடுதியில் பிள்ளையார் நோன்புக்கு இழையெடுத்துக் கொடுக்கப்பெறுகிறது. (இது தனியே ஆராய்ந்து எழுத வேண்டிய பகுதி.) தொடக்கத்தில் அனைவரும் ஒருங்குகூடி ஓரிடத்திலேயே இழை எடுத்துக் கொண்டிருக்க வேண்டும்; காலப்போக்கில், தனித்தனியே அவரவர் வீடுகளில் இழை எடுக்கும் வழக்கம் தோன்றியிருக்க வேண்டும்.

### மாவு தயாரித்தல்

பிள்ளையார் நோன்புக்கு வேண்டியவற்றைச் சேகரிப்பதே பெரிய வேலை; பெண்கள் பிள்ளையார் நோன்புக்குத் தேவை யான மாவைப் பச்சரிசியிலேயே இடித்துக் கொள்ள வேண்டும். பச்சரிசி வாங்கும் போது மாவு இடிப்பதற்குத் தகுதியானதாக வாங்குதல் வேண்டும். இக்காலத்தில் மாவை இடிக்காமல் மாவு மில்லில் அரைத்து வைத்துக் கொள்ளுகின்றனர். அடுத்துத் தென்னவட்டு என்னும் வேம்பார்க் கருப்பட்டி வாங்குதல் வேண்டும். கருப் பட்டியும் நல்லதாகப் பார்த்து வாங்கவில்லை என் றால் பணியாரம் நன்றாக வாராது. கருப்பட்டிப் பாகைக் காய்ச்சி வடிகட்டிக் கொள்வது நல்லது; பாகு வெந்திருக்க வேண்டும். இடித்த மாவைச் சலித்துப் பின் மாவில் பாகை ஊற்றிக் கிண்டி ஒரு சட்டியில் வைத்திருப்பர். இதனைப் பிள்ளையார் நோன்புக்கு முதல் நாளே செய்து கொள்ளுவது அவசியம்.

### ஆலங்காய் - அத்திக்காய்

பிள்ளையார் நோன்பு அன்று மாலையில் பிள்ளை யார் செய்யத் தேவையான மாவைச் சட்டியில் தனியே எடுத்து வைத்துக் கொள்ளுவது மரபு. பின் மாவைச் சிறிது சிறிதாக உருட்டிச் சீடைக் காய்களாக எண்ணெயில் வேக வைப்பர். இது சீடைக்காயை விடப் பெரிதாக இருக்கும். இதில் இருபத்தொரு உருண்டை சுட வேண்டும். இதனை 'ஆலங்காய்' என்பர். இதுபோலச் சின்னச் சின்னதாகத் தட்டி வேக வைப்பர்; இதனை 'அத்திக் காய்' என்பர். சில ஊர்களில் உருண்டைச் சீடைக்காய் மட்டும் செய்வர். இவற்றை யெல்லாம் விநாயகருக்குப் படைப்பதற்காக வெள்ளிக் கிண்ணத்தில் வைப்பர். இவற்றைப் பிள்ளையார்க்கு அபிஷேகம் செய்வதுமுண்டு.

### பொரிவகைகள்

சீடைக்காயுடன் பொரிவகைகளும் இடம் பெறுகின்றன. பொரிவகைகளில் நான்கு வகைப் பொரிகள் விநாயகருக்குப் படைக்கப் பெறுகின்றன. அதில் முதலாவது நெல்லுப் பொரி; இது மிக விசேஷமானது. ஆன்மாவைக் காணிக் கையாக்குவதற்குச் சமமானது. இரண்டாவது எள்ளுப் பொரி; எள்ளு என்னும் தானியம் பலவகைச் சிறப்புடையது. தமிழர் சடங்குகளில் எள்ளு பல்வகைச் சடங்களிலும் இடம்பெறும். மூன்றா வது சோளப் பொரி; நான்காவது கம்புப் பொரி. இரண்டும் இந்தியாவில் விளை யும் சிறு தானியங்கள். இவற்றையெல்லாம் பொரித்து விநாயகரை

வழிபடுவதன் நோக்கம் சிந்திக்கத்தக்கது. இந்த நான்கு வகைப் பொரிகளையும் வெள்ளிக் கிண்ணங்களில் வைத்துப் படைப்பர். இவற்றைப் பிள்ளையார்க்கு அபிஷேகிப்பர்.

### பலகார வகைகள்

இவை போகக், கல்கண்டு வடை, வெள்ளைப் பணியாரம், (இழை மாவில் சுட்ட) கருப்பட்டிப் பணியாரம் போன்ற பலகாரங் களையும், இன்று கட்டாயம் செய்வர். கருப்பட்டிப் பணியாரம் சுடுவது மிகமிக இன்றியமையாதது. அதற்கு மேல் அவரவர் விருப்பம் போல வேண்டிய பலகாரங்களைச் சுட்டுக் கொள்வது முண்டு. தேன்குழல், அதிரசமும் செய்து படைப்பர்.

### இழை எடுக்க...

இழை எடுப்பதற்குக் கருப்பட்டி மாவைப் பயன்படுத்துவது பலரின் வழக்கம்; சிலர் திரட்டுப் பால் காய்ச்சி அதில் இழை எடுத்துக் கொள்ளுகின்றனர்; வேறு சிலர் வாழைப்பழத்தில் இழை எடுத்துக் கொள்ளுகின்றனர்; மாவில் எடுத்துக் கொள்ளுவதே சரியா னது. அந்த அந்தக் குடும்பத்தின் ராசிப் படியோ வழக்கப்படியோ ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுகின்றனர். ஆலங்காய் என்னும் சீடைக்காயிலும் இழையை வைத்துத் தீபம் ஏற்றியும் எடுத்துக் கொள்ளுகின்றனர்.

### இருபத்தோரிழை

இழை எடுத்துக் கொள்ள நூலிழை தேவை; நூலிழை இருபத்தோ ரிழையால் அமைந்தது. அந்த இழையைப் பழைய வேட்டியிலிருந்து (வெளுத்தது) அல்லது கோடித் துணியிலிருந்து ஒவ்வொன்றாகப் பிரித்து எடுப்பர். நோன்பு நாள்கள் இருபத்தொன்றுக்கும் நாள் ஒன்றுக்கு ஓரிழை மேனி இருபத்தோரிழை எடுக்கப்பெறுகிறது. சில குடும்பங்களில் இருபத்தோரிழையை நூல் கண்டி லிருந்து அணியமாக்கி (தயாரித்து)க் கொள்ளுகின்றனர். வேறு சிலர் தாய் வீட்டிலிருந்து வாங்கிக் கொள்ளு கின்றனர்.

இந்த இருபத்தோரிழை களையும் ஒன்றாக்கி அவற்றை (மாவுப்) பிள்ளையார்க்குரிய திரியாகக் கொள்வது வழக்கம். மகா வித்துவான். ச. தண்டபாணி தேசிகர், "இருபத்தோரி ழையாலாகிய நூலைக் காப்பு நாணாக அணிதல் வேண்டும் என்றும் இதனை ஆண்கள் வலது மணிக்கட்டிலும் பெண்கள் இடதுமணிக் கட்டிலும் அணிவது மரபு" (கணபதி ப.94) என்றும் எழுதியுள்ளார்.

நகரத்தார்களிடையே இப்பழக்கம் கிடையாது. (நாட்டுக்கோட்டை நகரத்தார்களுக்குப் பூணூல் உண்டு என்றும் அய்யர்களுக்கும் இவர்களுக்கும் பூணூல் பிரி எண்ணிக்கையிலேயே வேற்றுமை என்றும் கூறுவர். திவசம், சவண்டி கரணம் போன்றவற்றில் பஞ்சாங்கக்காரர் செட்டியார்களுக்குப் பூணூல் போட்டு விடுவார்; காசிப்பூணூல் போட்டுக் கொள்வதுமுண்டு. நடப்பிலோ திருமணச் சடங்குகளிலோ பூணூல் போட்டுக் கொள்வதில்லை.)

விநாயகருக்குப் படைக்கும் போது தேங்காய் பழம் வெற்றிலை பாக்கையும் வைத்துப் படைப்பர்; தேங்காய் உடைத்து வைத்து பின்னரே இழை எடுப்பர்.

## ஆவிரம்பூ

நகரத்தார்கள் எந்த வகை யான பூவைப் பயன்படுத் தினாலும், பிள்ளையார் நோன்பில் ஆவிரம்பூவுக்குத் தனிச் சிறப்புண்டு. எத்தனையோ பூ வகையிலிருந்து ஆவிரம் பூவுக்கு ஏன் இத்தனை முக்கியத்துவம்? காட்டுக்குள் இருக்கும் காயாம்பூ திருமால்; அவற்றொடிருக்கும் ஆவிரம்பூ அல்லது ஆவாரம்பூ சிவ பெருமான். இந்த ஆவிரம் பூவைச் சேகரிக்கும் போதே ஆவிரம் கம்பையும் நகரத்தார்கள் செண்டு கட்ட அளவாக வெட்டிக் கொண்டு வருவர்; அவற்றில் இரண்டு கம்பைத் தேர்ந்தெடுத்துக் கம்பின் நுனி யில் நெல்குலை, பூளைப் பூ, ஆவிரங்காய் ஆகியவற்றை உச்சியில் இருக்குமாறு வைத்துக் கட்ட வேண்டும்; ஆவிரங் கம்பில்தான் கட்ட வேண்டும்; வேறு கம்பில் கட்டக்கூடாது. இவற்றைக் கட்டிய பின் தொடர்ந்து ஆவிரம் பூங்கொத்துக்களைச் செண்டு போலத் தொடர்ந்து கட்ட வேண்டும். அந்தச் செண்டின் நுனி பந்து போல விளங்கும். இது விநாயகரின் ஆயுதமான அங்குசத்தை நினைவு படுத்துகிறது. ஆவிரம் பூச்செண்டு, பிள்ளையார் நோன்புப் பிள்ளையாருக்கு இருபுறமும் சுவரில் சார்த்தி வைக்கப்பெறும். ஆவிரம்பூச் செண்டைச் சுவாமி வீட்டுக்குள் கொண்டு போய் வைப் பதே நோன்பின் தொடக்கமாகும். இந்த ஆவிரம்பூச் செண்டு யானையை அடக்கும் தோட்டி (அங்குசம்) என்றும் கொள்ளலாம்.

## பொது இடங்களில் இழை எடுத்தல்

பிள்ளையார் நோன்பு மாலை ஆறு மணிக்கு மேல் கொண் டாடப்படுகிறது. பலகாரம் செய்து முடித்துப் பெண்கள் சுவாமி கும்பிட வர இரவு எட்டு மணியாகும். அதன் பின் உறவினர் களுக்கும் பழகியவர்களுக்கும் பலகாரம் கொடுத்தனுப்பி மகிழ்வர்.

நகரத்தார்களில் சிலர், அய்யா வீடுகளில் போய் இழை எடுத்துக் கொள்வர்.

அரண்மனை சிறுவயல் போன்ற ஊர்களில், அனைவரும் ஒருங்கு கூடி நகரப் பிள்ளையார் கோயிலில் இழை எடுத்துக் கொள்ளுகின்றனர். பொது இடங்களில் அனைவரும் இழை எடுத்துக் கொள்ளுவதும் காணப்படுகிறது. இக்காலத்தில் நகரத்தார் சங்கங்களில் கூடி இழை எடுத்துக் கொள்ளுகின்றனர். இதனால் பெண்களுக்கு வேலைப்பளு குறைவு; இஃது ஒருவரொாடு ஒருவர் உறவாடுதற்கும் நல்ல வாய்ப்பாகிறது.

## பூவுக்குப் படைத்தல்

பிள்ளையார் நோன்புக்கு மறுநாள் ஆவிரம் பூவுக்குப் படைக்கின்றனர். கத்திரிக்காய், வாழைக்காய் அவித்துப் பருப்பு மசித்துப் பூவை வைத்துப் படைக்கின்றனர். கல்லல், நாச்சியாபுரம் போன்ற ஊர்களில் இவ்வாறு படைக்கும் பழக்கமுளது. இந்தப் படைப்பு வழக்கம் பல ஊர்களில் விடுபட்டுப் போய் விட்டது. பிள்ளையார் நோன்புக்கு வைத்த பூவில்லாமல், வேறு பூவைக் கோயிலிலிருந்து படைப்பதற்குக் கொண்டு வந்து தருவர்; இதற்கே படைப்பு. இருபத்தொருநாள் பலகாரம் மட்டுமே உண்டு. நோன்பு மேற்கொண்டிருந்தவர்கள் நோன்புக்கு மறுநாள் காலையில் பாரணை (விரத மிருந்து பின் உண்ணுதல்) செய்து விரதத்தை முடித்துக் கொள்ளுதல் வழக்கம்.

நோன்பு முடிந்த மறுநாள் காலை ஆவிரம்பூச் செண்டில் ஒன்றை வீட்டின் வாரத்தில் சொருகி வைப்பர். மற்றொன்றை அருகிலுள்ள பிள்ளையார் கோயிலுக்கு முன்னுள்ள சிதறு காய் அடிக்கும் பீடத்தில் அடிப்பர்.

## ஆவிரம்பூவின் பழமை

பிள்ளையார் நோன்பில் ஆவிரம் பூவுக்குத் தனிச்சிறப் புண்டு. ஆவிரை மலரைப் பயன்படுத்துவது ஏன் என்பது ஆராய்தற் பாலது. ஆவிரை தமிழகத்தின் தொன்மையான பயிரினம். தொல்காப்பியர்.

> *''பனையும் அரையும் ஆவிரைக் கிளவியும்*
> *நினையுங் காலை அம்மொடு சிவணும்.''* [தொல். எழுத். 283]

-என்று ஆவிரையைக் குறிப்பர். மிகத் தொன்மையான பயிரினத் தின் பூ, விநாயகர் வழிபாட்டுக்குப் பயன்படுத்தப் படுகிறது.

### ஆவிரம்பூவும் நகரத்தார்களும்

தைப்பொங்கலில் ஆவிரம் பூ, கண்ணுப் பூளைப்பூ (பூளைப்பூ) ஆகிய இரண்டையும் வீட்டின் வெளிக் கதவில் தமிழரனைவரும் கட்டுவர். பொங்கலன்று நகரத்தார் வீடுகளில் விளக்குச் சட்டி வைக்கும் போது ஆவிரம் பூவையும் பூளைப்பூவையும் உடன் வைப்பர். பிற பூக்களைப் போல ஆவிரம்பூ நாள் தோறும் பயன்படுத்தப்பட வில்லை. கோவை, பழநி வட்டாரங் களில் மார்கழிப் பூக்களை எடுத்து வைத்துப் 'பூக்கொட்டு' என்று விழாக் கொண்டாடு கின்றனர். இவ்விழாவில் ஆவிரம்பூவுக்குத் தனி மரியாதை தரப் பெறுகிறது. அதுபோலச் செட்டி நாட்டிலும் ஆவிரம் பூவுக்கு முதன்மை தரப்பெறுகிறது.

### அடையாளப் பாட்டு

பிள்ளையார் நோன்புக்கு ஆவிரை யைப் பயன்படுத்துவது குறித்து ஒரு சிறுபாட்டு வழக்கிலுள்ளது.

*"ஏற்ற இறக்கம் இல்லாத*
*ஒக்கப் பிறந்தவர் இருவர்*
*உடன் பிறந்தவர் மூவர்*
*செக்கச் சிவந்தவர் ஐவர்*
*செவ்வாழைப் பழம் மூன்று*
*நமரி வாழைப்பழம் நான்கு*
*பச்சைப் பாம்புக்குட்டி ஒன்று*
*படமெடுத்த பாம்புக்குட்டி மூன்று."*

இதில் வரும் எண்களைக் கூட்டி னால் இருபத்தொன்றுவரும். இருபத்தொரு பகுதிகள் உள்ள ஆவிரம் பூவைக் கொண்டு இருபத்தொருநாள் விரதம் இருந்து நகரத்தார்கள் பிள்ளையார் நோன்பைக் கொண்டாடுகின்றனர். ஆவிரம் பூவின் கொம்பின் அமைப்பு, குடும்ப ஒற்றுமையை வலியுறுத்துவதாகக் காணப் படுகிறது.

### ஒக்கப் பிறந்தவர்

ஆவிரை அல்லது ஆவாரை அல்லது ஆவிரம் செடி உயரமாக வளரும் குற்றுச் செடி. இச்செடியின் இளங்கிளைகள் இரட்டைக் கூட்டிலைகளையுடையவை. இரண்டு பக்கமுள்ள இலைகள் ஏற்ற இறக்கமின்றி நேருக்கு நேர் அமைந்திருக்கும். இந்த இலைகள் மூன்று அங்குல நீளம் இருக்கும். இதனையே 'ஏற்ற இறக்கம் இல்லாத ஒக்கப் பிறந்தவர் இருவர்' என்றனர்.

### உடன் பிறந்தவர்

ஆவிரம்பூவின் இலையடிச் செதில்கள் இலை போன்று பின்னுக்கு மடங்கிப் பெரிதாகக் காதுவடிவில் காணப்படு கிறது; செதிலின் அடிப்பாகத்தில் நீண்ட முனை ஒன்றிருக்கும். இவ்வாறு மூன்று, ஒன்றாகவும் இலையுடனும் இருக்கின்றன. இதனையே 'உடன் பிறந்தவர் மூவர்' என்று கூறுகின்றனர். பலவும் நன்றாக இருப்பது போலக் குடும்பத்தினரும் ஒற்றுமையாக இருக்க வேண் டும் என்பது கருத்து.

### செக்கச் சிவந்தவர்

அடுத்தது 'செக்கச் சிவந்தவர் ஐவர்' என்பதாகும். ஆவிரையின் பூக்கள் பெரியவை; பூங்கொத்து இலைக்கணுச் சந்திலோ, கிளை நுனியில் வளர் நுனிச் சமதள மஞ்சரியாக இருக்கும். அங்கு அக விதழும் புறவிதழும் ஐந்து அமைந் திருப்பதைக் காணமுடியும். இவை பளிச் சென்ற மஞ்சள் நிறமாகக் காட்சி தரும். இதில் ஆரஞ்சு நிறக்கோடுகள் இருக்கும். இந்த இயல்பையே மேற் கொண்ட அடி கூறுகின்றது.

### வாழைப்பழம்

ஆவிரம் பூவில் கேசரம் பத்திருக்கும்; அவற்றில் மூன்று போலிக் கேசரங்கள்; மீதமுள்ள ஏழு நன்கு வளர்ந்தவை; அதில் மூன்று பெரியன; நான்கு சிறியன. பூவிலுள்ள கேசரங்களையே வாழைப் பழம் எனச் சுட்டினர். பெரியனவான கேசரங்களைச் 'செவ்வாழைப் பழம் மூன்று' என்றனர், சிறியனவான நான்கு கேசரங்களை 'நமரி வாழைப்பழம் நான்கு' என்றனர்; நமரி வாழைப்பழம் சிறியன.

### பாம்புக்குட்டி

'பச்சைப் பாம்புக்குட்டி ஒன்று' என்றது பூவுக்குள் பச்சையாகவும் சிறியதாகவும் வளைந்து கிடக்கும் பிஞ்சையாகும். 'படமெடுத்த பாம்புக்குட்டி மூன்று' என்பது ஆவிரம் பூவிலுள்ள போலிக் கேசரங்களைச் சுட்டுவதாகலாம். இவ்வாறு ஆவிரம் பூவையும் அதன் இலையையும் அடையாளம் கண்டு கொள்ளத் தொடர்ச்சி யாகச் சில அடிகள் சொல்லப்படுகின்றன. பிள்ளையார் நோன்பில் வேறு வகையான பூக்களைப் பயன்படுத்தி விடக்கூடாது என்பதற்காக இவ்வாறு அடையாளம் காட்டப்பட் டிருக்கிறது.

சென்னை, மும்பை, கோல்கத்தா போன்ற நகரங்களில் இப்பூ கிடைப்பது அரிதாக உள்ளபடியால் இன்று நகரத்தார்கள் மஞ்சள்

நிறமான செவ்வந்திப்பூவை ஆவிரம் பூவுக்குப் பதிலாகப் பயன் படுத்துகின்றனர்.

### குறிக்கோள் நிறைவேற்றம்

ஒரு காரியத்தை உறுதியாக மேற்கொள்ள விரதம் பூண்டு அந்தக்குறிக்கோளை அடைய அடையாள மாலையாக ஆவிரம் பூவை அணிந்து கொள்வது தமிழர் வழக்கம். உலகம் நிலையாதது என்று காட்டி நினைத்ததை முடிப்பேன் என்று உணர்த்த பூளைப் பூவையும் ஆவிரம் பூவோடு அணிகுவர். சங்ககாலத்தில் தலைவன் தலைவியை மணக்க மடலேறுகிறான். உயிர் போனா லும் தன் குறிக்கோளை அடைந்து தீருவேன் என்றுணர்த்த தலைவன் ஆவிரை மலரைத் தன்னுடைய பனைபடுகலிமா (பனைமட்டை யால் ஆன குதிரை)வுக்கு அணிவிக்கின்றான்.

இதனை மதுரைக் காஞ்சிப் புலவன்,

*'பொன்னேர் ஆவிரைப் புலமலர் மிடைந்த*
*பன்னூன் மாலைப் பனைபடு கலிமா''* [குறு 173: 1-2]

- என்று பாடுகிறான்.

### ஆவிரையும் பூளைப்பூவும்

நெய்தற் கலித்தொகையில் 'தலைவன் ஆவிரையோடு பூளைப் பூவையும் பனையால் செய்யப்பட்ட குதிரைக்குச் சூட்டியதாகக் கூறினான்' என்று நல்லந்துவனார் பாடுகிறார். தலைவியை அடைதல் வேண்டும் என்ற குறிக் கோளையுடைய தலைவன் நினைத்ததை முடிக்க இப் பூக்களைச் சூடுகிறான்.

*'மணிப்பீலி சூட்டிய நூலொடு மற்றை*
*அணிப்பூளை ஆவிரை எருக்கொடு பிணித்தியாத்து''*
[கலி 138: 8-9]

இவ்வாறு ஆவிரம் பூ சங்க இலக்கியத்தில் களவைக் கற் பாக்கும் மடலேற்றத்தில் இல்லறப் பூவாகக் குறிக்கோள் பூவாகப் பயன்படுத்தப்படுகிறது.

தலைவியை அடைய வேண்டும் என்ற குறிக்கோள் ஒன்றையே கருதித் தலைவன் ஆவிரம் பூவையும் பூளைப் பூவையும் தன் குதிரைக்குச் சூட்டுகிறான். பொங்கல் திருநாளில் பொங்கலைக் கருதி ஆவிரம் பூவும் பூளைப்பூவும் வீட்டின் முன்னால் கட்டப் பெறுகின்றன. ஆதலின் ஒரு செயலை மேற்கொள்ளும் போது

அதை முழுமையாக ஏற்று முடித்து நிறை வேற்றுவோம் என்பதைக் காட்ட இப்பூக்கள் பயன்படுத்தப்படுகின்றன.

**சமய நோக்கம்**

சமணர்களாக இருந்த நாட்டுக் கோட்டை நகரத்தார்கள், சைவர் களாக மாறிய போது உள்ளத் தூய்மையும் உடல் தூய்மையும் செய்துகொள்ள விரும்பினர். ஒளியண்ணாமலையாகிய சோதியை- இழையை- விழுங்குவதன் மூலம் ஆன்ம ஒளி உயிருக்கு ஏற்பட்டது என்றும் பழையன அக்கினியால் அழிந்தன என்றும் உள்ளம் தூய்மை பெற்றது என்றும் கருதினர்; புறந்தூய்மை நீரான் அமையும் என்பர். உடல் அழுக்கை- சமணராய் இருந்த போது மெய்யிற் சேர்ந்த தூசை- ஆவிரம் பூவாலும் அதன் பட்டையாலும் போக்கிக் கொண்டனர். தோலைத் தூய்மை செய்ய ஆவிரம் பட்டையைப் போலப் பிறிதொன்றில்லை. பூளைப் பூவும் உள்ளுறுப்பு களில் உள்ள கசடுகளை நீக்கும் சிறந்த மருந்தாகும். சிறுநீரக அடைப்பைப் பூளைப் பூச்சாற்றைக் கொடுத்து நீக்குவது உண்டு. சமணர்கள், சைவ சமயத்துக்குப் புக்க போது தங்களை மதம் மாற்றிக் கொள்ள ஏற்பட்ட சடங்கே பிள்ளையார் நோன்பு.

**குடும்ப ஒற்றுமை**

பிள்ளையார் நோன்பு, நாட்டுக் கோட்டை நகரத்தார் களிடையே குடும்ப ஒற்றுமையை ஏற்படுத்தும் திருநாளாகும். ஆவிரம் செடியின் இலையும் அதையே காட்டுகிறது. குடும்பத்தி லுள்ள பெரியவரே, இழை எடுத்துக் கொடுப்பார். அப்பத்தா வீட்டு அய்யா இருந்தால் அவரே இழை எடுப்பர்; அவர் இல்லை என்றால் அவர் மகன் எடுத்துக் கொடுப்பார். அண்ணன் தம்பிகள் பலரிருந் தால், அண்ணன் எடுத்துக் கொடுப்பார்; உடன் பிறந்தவர்கள் தனித்தனியே அவரவர் வீட்டில் எடுத்துக் கொள்வதுமுண்டு.

குடும்பப் பெரியவர் தொலை நாட்டில் இருந்தால், வீட்டிலிருப்ப வர்களில் பெரியவர் எடுத்துக் கொடுப்பர். பங்காளிகளுள் பெரியவர் ஒருவரை வீட்டுக்கு அழைத்து இழை எடுத்துத் தருமாறு கேட்டுக் கொள்வது முண்டு. குடும்பத்திற்குள் ஏதேனும் பிணக்கு இருந்தால், இழை எடுத்துக் கொடுப்ப தன் மூலம் பிணக்குத்தீரும். இந்த நோன்பு குடும்ப ஒற்றுமையை வளர்ப்பது. தாய்வழியினர் எடுத்துக் கொடுப்பதில்லை.

## வேறு விளக்கங்கள்

பிள்ளையார் நோன்பு பற்றி வெவ்வேறு வகையான வரலாறுகள் கூறப்படுகின்றன. திரு.எஸ்ஸாரெம், இதனை 'விநாயக சஷ்டி' என்பர். அவர் இது குறித்துக் கூறுவன: "முருகனைப் போலவே விநாயகப் பெருமானுக்கும் சஷ்டி விரதம் உகந்ததாகிறது. ஒரு முறை சிவபெருமானும் உமாதேவியும் சொக்கட்டான் விளையாடிக் கொண்டிருந்த போது, மகா விஷ்ணு பொய்ச் சாட்சி சொல்லும்படி ஆகிவிட்டது. அதனால் கோபமுற்ற உமாதேவி, மகா விஷ்ணுவைக் குருட்டு மலைப் பாம்பாகப் போகுமாறு சபித்து விட்டார். அவருக்கு ஆறுதல் கூறிய சிவபெருமான் கயாமுகாசுரவதம் நடைபெறும் வரை காத்திருக்குமாறு சொன்னார்.

விநாயகர் கஜமுகாசுரனுக்கு முத்தி கொடுத்த பின்னர், கணபதீச்சரத்திலிருந்து மூஷிகவாகனத்தில் திரும்பும் வழியில் ஆலங்காட்டில், மலைப்பாம்பாக மாறியிருந்த மகா விஷ்ணுவைக் கண்ணுற் றார்; மகிழ்ச்சியடைந்தார். 'விநாயகரே! எனக்குக் காட்சி யளித்து நன்மை புரிந்த இந்த மார்கழித் திங்கள் சஷ்டி நாளில் உம்மை யார் வழிபட் டாலும் அவர்கள் சகல துயரங் களிலிருந்தும் விடுபட்டுச் சகல விருப்பங்களையும் அடையும்படி அருள்புரிய வேண் டும்' என்று கோரினார். அதற்கு விநாயகரும் மகிழ்ச்சியோடு இசைந்தார்.

இது விநாயக சஷ்டி என்றும் மார்கழி சஷ்டி என்றும் குமார சஷ்டி என்றும் பெருங் கதை விரதம் என்றும் கூறப் பெறுகிறது. -(கணபதி களஞ்சியம், சிங்கப்பூர், ப. 150) இக்கதை இட்டுக் கட்டப்பட்டதேயன்றி வேறில்லை.

## அனந்தன் நோன்பு

மகாவித்துவான் ச.தண்ட பாணி தேசிகர், விநாயக சஷ்டி யைக் கொண்டாடும் முறை குறித்து வேறு வகையாகக் கூறுகிறார். "கார்த்திகை முதல் சஷ்டி வரை ஒவ்வொரு நாளும் விநாயகருக்குக் காலையில் திருமஞ்சனம் செய்து புதிது புதிதாக ஒருவகைப் பணியாரத்தைச் செய்து படைத்து வழிபடுவர். நாள் முழுமையும் விநாயகர் பற்றிய சிந்தனையில் கழிப்பர். பிள்ளையார் நோன்பை இவ்வாறு செய்து அனந்தன் துன்பம் நீங்கப்பெற்றான் என்று புராணம் கூறுகிறது. நகரத்தார்கள் நாள் தோறும் பிள்ளையாருக்குத் திருமஞ்சனம் செய்வதில்லை." திரு ச. தண்டபாணி தேசிகர்,

இதனைக் கொண்டாடுவோர் யார், எந்தப் பகுதியினர் இவ்வாறு கொண்டாடுகின்றனர் என்று சுட்டிலர்.

### வயிரவன் கோயில்

ஒன்பது கோயிலுள் ஒன்றான நகர வயிரவன் கோயிலுக்குரிய நகர விடுதியில் நகரத்தார் அனைவருக்கும் பிள்ளையார் நோன்பன்று இழை எடுத்துக் கொடுக்கின்றனர். பொது இடங்களில் இழை எடுத்துக் கொடுக்கும் போக்கே இதற்கு அடிப்படை. நகரத்தார் ஆடவர் பலரும் தொலைநாடுகளுக்குக் கொண்டு விற்கப் போனபோது, இங்கு இழை எடுத்துக் கொடுக்கும் வழக்கம் தோன்றியிருக்க வேண்டும்.

### விநாயகரகவல் படித்தல்

பிள்ளையார் நோன்பில் இழை எடுத்துக் கொடுப்பது, பொரி, பலகாரம் செய்வது ஆகியன போல அந்நாளில் அப்பொழுதில் விநாயகர் அகவலும் பிற சிறு பிரபந்தங்களும் படிப்பதும் மிக மிக முக்கியம். பிள்ளையார் சிந்தனை, பள்ளியிற் பிள்ளையார் சிந்தனை, சரசுவதி சிந்தனை போன்ற சிறு நூல்களுடன் 'விநாயகர் அகவலும்' படிப்பர். இஃது மிக முக்கியமானது. விநாயகர் அகவல் சைவ சமய உண்மையையும் சைவசித்தாந்த உண்மையையும் விளக்குவதாகும். பழைய காலத்தில் சைவசித்தாந்தம் பற்றிச் சொல்லி வந்ததன் வளர்ச்சியே, விநாயகர் அகவல் படித்தலாகும்.

விநாயகர் துதி

*வேழ முகத்து விநாயகனைத் தொழ*
*வாழ்வு மிகுத்து வரும்*
*வெற்றி முகத்து விநாயகனைத் தொழ*
*வேண்டிய புத்தி மிகுந்துவரும்*
*வெள்ளைக் கொம்பன் விநாயகனைத் தொழத்*
*துள்ளியோடும் தொடர்ந்த வினைகளே!*
*அப்பம் முப்பழம் அமுதுசெய் தருளிய*
*தொப்பை யப்பனைத் தொழவினை யறுமே!*

பிள்ளையார் சிந்தனை

*சிந்தித் தவர்க்கருள் கணபதி ஜய ஜய*
*சீரிய வானைக் கன்றே ஜய ஜய*
*அன்புடை அமரரைக் காப்பாய் ஜய ஜய*
*ஆவித் துணையே கணபதி ஜய ஜய*
*இண்டைச் சடைமுடி இறைவா ஜய ஜய*

ஈசன் தந்தருள் மகனே ஜய ஜய
உன்னிய கருமம் முடிப்பாய் ஜய ஜய
ஊர்நவ சக்தி யுகந்தாய் ஜய ஜய
எம்பெரு மானே இறைவா ஜய ஜய
ஏழுல குந்தொழ நின்றாய் ஜய ஜய
ஐயா கணபதி நம்பியே ஜய ஜய
ஒற்றை மருப்புடை வித்தகா ஜய ஜய
ஓங்கிய ஆனைக் கன்றே ஜய ஜய
ஔவிய மில்லா அருளே ஜய ஜய
அஃகர வஸ்து வானவா ஜய ஜய
கணபதி என்வினை களைவாய் ஜய ஜய
ஙப்போல் மழுவொன் றேந்தியே ஜய ஜய
சங்கரன் மகனே சதுரா ஜய ஜய
ஞயநம் பினர்பா லாடிய ஜய ஜய
இடம்படு விக்கின விநாயக ஜய ஜய
இணங்கிய பிள்ளைகள் தலைவா ஜய ஜய
தத்துவ மறைதெரி வித்தகா ஜய ஜய
நன்னெறி விக்கின விநாயகா ஜய ஜய
பள்ளியி லுறைதரும் பிள்ளாய் ஜய ஜய
மன்று ளாடும் மணியே ஜய ஜய
இயங்கிய ஞானக் குன்றே ஜய ஜய
அரவக் கிண்கிணி ஆர்ப்பாய் ஜய ஜய
இலகக் கொம்பொன் றேந்தியே ஜய ஜய
வஞ்சனை பலவுந் தீர்ப்பாய் ஜய ஜய
அழகிய வானைக் கன்றே ஜய ஜய
இளமத யானை முகத்தாய் ஜய ஜய
இரகுபதி விக்கின விநாயகா ஜய ஜய
அனந்தலோ டாதியில் அடிதொழ அருளே!

பள்ளியிற் பிள்ளையார் சிந்தனை

எள்ளுப் பொரித்த பொரியும்
இடித்தவல் தன்னிற் கலந்து
வள்ளிக் கிழங்கைத் திருத்தி
வாழைப் பழத்தை உரித்து
வள்ளிய பாகு திரட்டி
உண்ணும் படியே தருவோம்
கள்ளத் திருமால் மருகா!
கணபதி சப்பாணி கொட்டாயே!

ஆறு தேங்காய் அவல்தூணி
அதற்குத் தகுந்த எள்ளுருண்டை
நூறு குடலை மாம்பழம்
நொடிக்கும் அளவில் அமுது செய்ய
வல்ல பிள்ளாய்!
ஆடாய்! பாடாய்! சங்கீதம்
அடியேன் காணநின் றாடாயே!

சண்டப் பெருச்சாளி ஏறிச்
சடுகுடு என்ன உலாவி
இண்டை இளம்பிறை சாய
இணங்கிய கொம்போ ரிரண்டுத
அண்டத் தமரர் துதிக்க
அடைக்கலங் காத்த பிரானே!
குண்டைக் கணபதி நம்பி
குடங்கையாற் சப்பாணி கொட்டாயே!

பொழுது விடிந்தது பொழுது
போய்த் திருமலை ஏறவேண்டும்
ஏறிமலர்ந்தபூக் கொய்ய வேண்டும்
சாத்தியே கைகட்டி நிற்க வேண்டும்
நின்று திருவிளக்கேற்ற வேண்டும்
ஏற்றி அரகர வென்ன வேண்டும்.

ஐயா கணபதி நம்பி
ஆயிரம் நாம முடையாய்
பொய்யில்லா மெய்யை யுரைப்பாய்
போனதெல்லாம் தருவாய்!
வெள்ளித் தாலம் பூசிவைத்து
வேண்டும் படியே யிட்டுண்டு
பள்ளிக் கேற்க நடவாய்!
பாக்கியஞ் செய்த பிள்ளாய்!
பிள்ளாய் பிள்ளாய் பேருடையாய்!
பிரமம் என்னும் பெயருடையீர்!
பிள்ளைகள் தங்கள் பிரானாரே!
இருந்தீரேல் பிரா னாரே!

எங்கள் மனது கலங்காதே
பள்ளித் தடுக்கும் கையேடும்
படிக்கும் சுவடியும் பரிந்தெடுத்துத்

துள்ளித் திரியும் கால் தன்னைச்
சுகமே நிறுத்தும் பிரானாரே
ஓடாதே ஒளியாதே
இட்டதே சோறும் பெற்றதே கறியும்
உண்டு தூங்கிப் பூசை முடித்து
வெள்ளி முளைக்கப் பள்ளிக்கு வாரும்.

விநாயகர் அகவல்

சீத களபச் செந்தா மரைப்பூம்
பாதச் சிலம்பு பல இசை பாடப்
பொன்னரை ஞாணும் பூந்துகில் ஆடையும்
வன்ன மருங்கில் வளர்ந்தழகு எறிப்பப்
பேழை வயிறும் பெரும்பாரக் கோடும்
வேழ முகமும் விளங்குசிந் தூரமும்
அஞ்சு கரமும் அங்குச பாசமும்
நெஞ்சிற் குடிகொண்ட நீல மேனியும்
நான்ற வாயும் நாலிரு புயமும்
மூன்று கண்ணும் மும்மதச் சுவடும்
இரண்டு செவியும் இலங்குபொன் முடியும்
திரண்டமுப் புரிநூல் திகழொளி மார்பும்
சொற்பதங் கடந்த துரிய மெய்ஞ்ஞான
அற்புதம் நிறைந்த கற்பகக் களிறே!
முப்பழம் நுகரும் மூஷிக வாகன
இப்பொழு தென்னை ஆட்கொள வேண்டித்
தாயாய் எனக்குத் தானெழுந் தருளி
மாயாப் பிறவி மயக்கம் அறுத்துத்
திருந்திய முதலைந் தெழுத்தும் தெளிவாய்ப்
பொருந்தவே வந்தென் உளந்தெனில் புகுந்து
குருவடி வாகிக் குவலயந் தன்னில்
திருவடி வைத்துத் திறமிது பொருளென
வாடா வகைதான் மகிழ்ந்தெனக் கருளிக்
கோடா யுதத்தால் கொடுவினை களைந்தே
உவட்டா உபதேசம் புகட்டியென் செவியில்
தெவிட்டாத ஞானத் தெளிவையும் காட்டி
ஐம்புலன் தன்னை அடக்கும் உபாயம்
இன்புறு கருணை இனிதெனக் கருளி
கருவிகள் ஒடுங்கும் கருத்தினை அறிவித்து
இருவினை தன்னை அறுத்திருள் கடிந்து

தலமொரு நான்கும் தந்தெனக்கு அருளி
மலமொரு மூன்றின் மயக்கம் அறுத்தே
ஒன்பது வாயில் ஒருமந் திரத்தால்
ஐம்புலக் கதவை அடைப்பதுங் காட்டி
ஆறா தாரத்து அங்குச நிலையும்
பேறா நிறுத்திப் பேச்சுரை அறுத்தே
இடைபிங் கலையின் எழுத்தறி வித்துக்
கடையில் சுழிமுனைக் கபாலமுங் காட்டி
மூன்று மண்டலத்தின் முட்டிய தூணின்
நான்றெழு பாம்பின் நாவில் உணர்த்திக்
குண்டலி அதனில் கூடிய அசபை
விண்டெழு மந்திரம் வெளிப்பட உரைத்து
மூலா தாரத்தின் மூண்டெழு கனலைக்
காலால் எழுப்புங் கருத்தறி வித்தே
அமுத நிலையும் ஆதித்தன் இயக்கமும்
குமுத சகாயன் குணத்தையுங் கூறி
இடைச் சக்கரத்தின் ஈரெட்டு நிலையும்
உடற் சக்கரத்தின் உறுப்பையுங் காட்டி
சண்முக தூலமும் சதுர்முக சூட்சமும்
எண்முக மாகஇனி தெனக்கு அருளிப்
புரியட்ட காயம் புலப்பட எனக்குத்
தெரியெட்டு நிலையும் தெரிசனப் படுத்திக்
கருத்தினில் கபால வாயில் காட்டி
இருத்தி முத்தி இனிதெனக் கருளி
என்னை அறிவித்து எனக்கருள் செய்து
முன்னை வினையின் முதலைக் களைந்து
வாக்கும் மனமும் இல்லா மனோலயம்
தேக்கியே எந்தன் சிந்தை தெளிவித்து
இருள்வெளி இரண்டுக்கும் ஒன்றிடம் என்ன
அருள்தரும் ஆனந்தத்து அழுத்தியென் செவியில்
எல்லை யில்லா ஆனந்தம் அளித்து
அல்லல் களைந்தே அருள்வழி காட்டிச்
சத்தத்தின் உள்ளே சதாசிவம் காட்டிச்
சித்தத்தி னுள்ளே சிவலிங்கங் காட்டி
அணுவிற் கணுவா யப்பாலுக் கப்பாலாயக்
கணுமுற்றி நின்ற கரும்புள்ளே காட்டி
வேடமும் நீறும் விளங்க நிறுத்திக்




கூடுமெய்த் தொண்டர் குழாத்துடன் கூட்டி
அஞ்சக் கரத்தி னரும்பொருள் தன்னை
நெஞ்சக் கருத்தின் நிலைய றிவித்துத்
தத்துவ நிலையைத் தந்தெனை யாண்ட
வித்தக விநாயக விரைகழல் சரணே.

விநாயகர் அகவல், ஞானத்தையும், பக்தியையும், சைவ சமய உண்மையையும் தரும் அற்புத நூல். ஔவையார் அருளிய இந்நூலையும் வேறு சில பிரபந்தங்களையும் நகரத்தார்கள் பிள்ளையார் நோன்பில் ஓதி வழிபடுவார்கள்; விநாயகரகவலைக் குடும்பப் பெரியவர் படிக்க மற்றவர்கள் அதனைச் சொல்லுவர்; அல்லது ஆண்களும் பெண்களும் செவிமடுப்பர். இது மிகப் பழங்காலமாக இருந்து வரும் வழக்கம். நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் சமணர்களா இருந்து சைவர்களாக மாறியவர்கள். அக்காலத்து நகரத்தார்களுக்குச் சைவ சமய மெய்ம்மைகள் குரு முகமாக உபதேசிக்கப் பெற்றன. அவ்வாறு வழிவழி வந்த ஞானத்தை ஔவையார் விநாயகரகவலாக ஆக்கித் தந்திருக்கிறார்.

விநாயகரகவல் மிகமிகச் சிறந்த நூல்; அடி எண்ணிக்கை குறைவானாலும் அதன் கருத்து வளம் மதிப்பிடற்கரியது.

### விநாயகரகவல் கருத்தோட்டம்

குளிர்ந்த சந்தனக் கலவை பொருந்திய சிவந்த நிறத்தையுடைய தாமரை மலர் போன்ற பாதங்களில் கிடக்கும் சிலம்பு பல வகையான இசை ஒலிகளை ஒலித்துப் பாடவும், தங்கத்தாலாகிய அரைஞாண் கயிறும், பூவேலைப்பாடு செய்த மெல்லிய பட்டுடையும், அழகிய இடையில் பெரியனவாகி அழகு தோன்றிய ஒளி வீசுகின்றன. விநாயகருக்குப் பெருமை மிக்க வயிறு, ஒற்றைக் கொம்பு, யானை முகம், சிவந்த புள்ளிகள், ஐந்து கைகள், தோட்டி பாசம் என்ற கருவிகள், அடியவர் நெஞ்சில் விளங்கித் தோன்றும் கறுப்பு மேனி ஆகியன விநாயகரின் திருமேனி அழகாகும்.

தொங்குகின்ற கையான துழ்பிக்கையும் நான்கு பருத்த தோள்களும், மூன்று கண்களும், மதநீர் வழிந்தோடிய அடையாளமும் இரண்டு காதுகளும் விநாயகர் முகத்தை அலங்கரிக்கின்றன. தலையில் பொன்முடி, மார்பில் பூணூல் ஆகியன இவரின் அடையாளங்கள். இவரைச் சொல்லாலும் புனைந்துரைக்க முடியாது; பொருளாலும் அளவிட்டுக் காட்ட முடியாது. தன்மயமாய்-உண்மை ஞானம் நிறைந்த வியத்தகு

அற்புதக் காட்சியாகத் திகழ்பவர் விநாயகர். அப்பெருமான் மா, வாழை, பலா என்ற மூன்று கனி வகைகளைத் தின்பவன்; பெருச்சாளியை வாகனமாக உடையவன் (பிள்ளையார் நோன்பாகிய) இப்போதின் கண் (வேற்றுச் சமயத்திலிருந்து மாறி வந்திருக்கின்ற) பக்குவான்மாவாகிய என்னை உன்னை வழிபடும் அடியவனாகக் கொள்ள வேண்டி, எல்லாவற்றையும் தாங்குகின்ற தாயாகி எனக்கு நீயே குருவாக எழுந்தருளிப் பிறந்து பிறந்து தொடர்ந்து வருகின்ற அழியாத பிறவியைத் திரும்பத் திரும்ப வராமல் ஒட்ட அறுத்தெறிந்து அருள்வார்.

பன்முறை சொல்லிச் சொல்லித் திருந்தியதும் மகா வாக்கியமானதும் ஆனது, திருவைந்தெழுத்து; அதனைத் தெளிவாக நிலை நிற்குமாறு என் மனத்திலிருக்கும்படி உபதேசித்த குரு விநாயகர்; அவர் இம் மண்ணுலகில் தன் திருவடியை என் தலை மீது வைத்து உறுதியாக உண்மைப் பொருள் அவரே என்று கூறிப் பிறவித்துயர் வாரா வண்ணம் அருள் பாலித்தார். அவர் தன் ஒற்றைக் கொம்பாகிய ஆயுதத்தால் கொடிய வினைகளை வெருட்டினார்.

விநாயகப் பெருமான் உபதேச மொழிகளைக் காதுகளில் திகட்டிப் போகாத வண்ணம் அறிவுறுத்தினார். ஞானத்தின் முடிந்த முடிபை எனக்கு உணர்த்தினார். ஐம்புலனை அடக்கும் நெறியைக் கருணையால் அறிவுறுத்தார். முப்பத்தாறு கருவிகளும் ஒடுங்கும் நெறியை அறிவித்து இருவினையையும் அறுத்து நீக்கினார். அவர் அஞ்ஞான இருளைக் கடிந்து நான்கு இடங்களிலும் பெறத்தக்க மெய்ஞ்ஞானத்தைத் தந்தார்; தந்து அருளி மும்மலக்கட்டை நீக்கினார். ஒன்பது உறுப்புகளின் வழியையும் 'ஓம்' என்ற ஒரு மந்திரத்தால் கட்டுப்படுத்தினார். ஆறாதாரத்தை அங்குச நிலையால் கட்டுப்படுத்தினார். மௌனமாக்கி இடைகலை பிங்கலைக்குரிய ஓர் எழுத்து மந்திரத்தை அறிவித்தார்; நாடி முடிவில் அடையும் பிரம மந்திரத்தைக் காட்டி, முட்டிச் சேர்ந்துள்ள வீணாத் தண்டிலிருந்து நாவின் கண் உணர்த்தினார்.

குண்டலி சக்தியோடு சேர்ந்திருக்கின்ற அம்ச மரத்தினின்று தோன்றும் ஓர் எழுத்து மந்திரத்தைக் கூறி விநாயகர் அருள்கிறார். மூலாதாரத்தில் தோன்றி எழும் விந்து அக்கினியை வாயுவால் எழுப்பிக் கருத்தை அறிவித்து அருள்பவர் அவரே. அமுதத்தை ஆக்கும் நிலையினையும் சூரியன் சந்திரன் ஆகியவற்றின் குணத்தைக் கூறிப் பதினாறு இதழ்களுள்ள கண்டச் சக்கரத்தின்

உறுப்புகளையும் உணர்த்துபவர் விநாயகரே. அவர் ஆறுமுகமாக, நான்குமுகமாக அடியார்கள் நினைக்கின்ற எண்ணிக்கையில் முகங்களைப் பெற்று எனக்குக் கருணை காட்டிச் சூட்சும சரீரத்தின் இயல்பு எனக்குப் புலப்படச் செய்பவர், விநாயகர்.

யானைமுகப் பெருமான் எட்டுத் தொகுதி உறுப்புகளின் நிலையைத் தெரியச் செய்தார்; அவர் காட்சி தரும்படி துவாத சாந்தப் பெரு வெளியில்தோன்றி இருக்கச் செய்து சாலோக முத்தி இனியது (தாச மார்க்கம்) என்று எனக்கு அறிவித்தார். அம் முத்தியின்பத்தை வழங்கி ஆணவ மலத்தளையை நீக்கினார். சொல்லாலும் மனத்தாலும் அறிய முடியாது என் மனத்தில் நிறைந்து என்னைத் தெளிவு செய்து அருள் செய்கின்ற சாரூப இன்பத்தில் (சகமார்க்கம்) திளைக்கச் செய்தார்.

என் செவியில் மந்திரத்தை உபதேசித்து ஆனந்தம் அளித்துப் பிறவித்துயரைப் போக்கி எனக்கு வழிகாட்டியவர் விநாயகப் பெருமான். சத்தத்துக்குள்ளே சதாசிவ மூர்த்தியையும், சித்தத்துக்குள்ளே சிவலிங்க மூர்த்தியையும் கரும்புக்குள்ளே இனிக்கும் சாறு இருப்பது போலக் காட்டினார். சிவ வேடமும் திருநீறும் புகழ்பெற்று வாழ அடியார் கூட்டத்துடன் என்னையும் சேர்த்தருளினார். திருவைந்தெழுத்திலுள்ள மெய்ம்மைகளை என் உள்ளத்தில் உணர்த்தி அடிமை கொண்ட ஞானியே! விநாயகனே! உன் திருவடிகளில் சரணமடைகின்றேன்.







